கணபதிதுணை.

# நக்கீரதேவநாயனார்

அருளிச்செய்த

# கோபப்பிரசாத மூலமும்

## ஸ்ரீலஸ்ரீ சிதம்பரத்தம்பிரான் அவர்கள்

# தந்த உரையும்.

———

திருச்சிற்றம்பலம்.

தவறுபெரி துடைத்தே தவறுபெரி துடைத்தே
வெண்டிரைக் கருங்கடன் மேற்றுயில் கொள்ளு
மண்ட வாணனுக் காழியன் றருளியு
மூலக மூன்று மொருங்குடன் படைத்த
மலரோன் றன்னை வான்சிர மரிந்தும்
கான வேடுவன் கண்பரிந் தப்ப
வான நாடு மற்றவற் கருளியுங்
கடிபடு பூங்கணைக் காம னாருடல்
பொடிபட விழித்தும் பூதலத் திசைந்த
தானுட னாகிய சண்டியை

வானவ னாக்கியு
மறிகட லுலகின் மன்னுயிர் கவருங்
கூற்றுவன் றனக்கோர் கூற்றுவ னாகியுங்
கடல்படு நஞ்சங் கண்டத் தடக்கியும்
பருவரை சிலையாப் பாந்த ணாணாத்
திரிபுர மெரிய வொருகணை துரந்துங்
கற்கொண் டெறிந்த சாக்கிய னன்பு
தற்கொண் டின்னரு டான்மிக வளித்துங்
கூற்றெனத் தோன்றியுங் கோளரி போன்றுந்
தோற்றிய வாரணத் தீருரி போர்த்து
நெற்றிக் கண்ணு நிலவிய நான்கு
நற்றா நந்தீச் சுவரற் கருளியு
மறிவினை யோரா வரக்க னுருட
னெறநெற விழுதர வொருவிர லூன்றியுந்
திருவுரு வத்தொடு செங்க ணேறு
மரியன திண்டிற லசுரனுக் கருளியும்
பல்கதி ருரவோன் பற்கெடப் பாய்ந்து
மல்குபி ருங்கிருடிக்கு மாவர மீந்துந்
தக்கன் வேள்வி தகைகெடச் சிதைத்து
மிக்கவர நத்திமா காளர்க் கருளியுஞ்
செந்தீக் கடவுடன் கரதலஞ் செற்றும்

பைந்தார் நெடும்படை பார்த்தற் கருளியுங்
கதிர்மதி தனையோர் காற்பயன் கெடுத்து
நிதிபயில் குபேரற்கு நீணக ரீந்துஞ்
சலந்தர னுடலந் தான்மிகத் தடிந்து
மறைபயின் மார்க்கண் டேயனுக் கருளியுந்
தாரகற் கொல்லமுன் காளியைப் படைத்துஞ்
சீர்மலி சிலந்திக் கின்னர சளித்துங்
கார்மலி யுருவக் கருடனைக் காய்ந்து
மாலின் மீழிருந் தறநெறி யருளியு
மின்னவை பிறவு மெங்க ளீசன்
கோபப் பிரசாதங் கூறுங் காலைக்
கடிமல ரிருந்தோன் கார்க்கடற் கிடந்தோன்
புடமுறு சோலைப் பொன்னகர் காப்போ
னுரைப்போ ராகிலு மொண்கடன் மாநீ
ரங்கைகொண் டிறைக்கு மாதன் போன்றுள
ரொடுங்காப் பெருமை யும்பர் கோனை
யடங்கா வைம்புலத் தறிவில் சிந்தைக்
கிருமி நாவாற் கிளத்தும் பரமே யதாஅன்
றொருவகைத் தேவரு மிருவகைத் திறமு
மூவகைக் குணமு நால்வகை வேதமு
மைவகைப் பூதமு மறுவகை யிரதமு

மெழுவகை யோசையு மெண்வகை ஞானமு
மொன்பதின் வகையு மொண்மலர்ச் சிறப்பும்
பத்தின் வகையு மாகிய பரமனை
யின்பனை நினைவோர்க் கென்னிடை யமுதினைச்
செம்பொனை மணியினைத் தேனினைப் பாலினைத்
தஞ்சமென் றொழுகுந் தன்னடி யார்த
நெஞ்சம் பிரியா நிமலனை நீடுயர்
செந்தழற் பவளச் சேணுறு வரையனை
முக்கட் செல்வனை முதல்வனை மூர்த்தியைக்
கள்ளங் கைவிட் டுள்ளம துருகிக்
கலந்து கசிந்துதன் கழலிணை யவையே
நினைந்திட வாங்கே தோன்று நிமலனைக்
தேவ தேவனைத் திகழ்சிவ லோகனைப்
பாவ நாசனைப் படரொளி யுருவனை
வேயார் தோளி மெல்லியல் கூறனைத்
தாயாய் மன்னுயிர் தாங்குந் தந்தையைச்
சொல்லும் பொருளு மாகிய சோதியைக்
கல்லுங் கடலு மாகிய கண்டனைத்
தோற்ற நிலையீ றாகிய தொன்மையை
நீற்றிடைத் திகழு நித்தனை முத்தனை
வாக்கு மனமு மிறந்த மறையனைப்

பூக்கமழ் சடையனைப் புண்ணிய நாதனை
யினைய தன்மைய னென்றறி வரியவன்
றனைமுன் விட்டுத் தாமற்று நினைப்போர்
மாமுயல் விட்டுக்
காக்கை பின்போங் கலவர் போலவும்
விளக்கங் கிருப்ப மின்மினி கவரு
மளப்பருஞ் சிறப்பி லாதர் போலவும்
கச்சங் கொண்டு கடுந்தொழின் முடியாக்
கொச்சைத் தேவரைத் தேவரென் றெண்ணிப்
பிச்சரைப் போலவோ
ராரியப் புத்தகப் பேய்கொண்டு புலம்புற்று
வட்டணை பேசுவர் மானுடம் போன்று
பெட்டினை யுரைப்போர் பேதையர் நிலத்
துன்றலை மீன்றலை யெண்பல மென்று லதனை
யறுத்து நிறுப்போ ரொருத்த ரின்மையின்
மத்திர மாகுவர் மாநெறி கிடப்பவோர்
சித்திரம் பேசுவர் தேவராகி [றறிய
லின்னோர்க் காய்ந்தன ரின்னோர்க் கருளின ரென்
வுலகின் முன்னே யுரைப்ப தில்லை யாகிலு
மாடு போலக் கூடிநின் றழைத்து
மாக்கள் போல வேட்கை யீண்டு

மிப்படி ஞான மப்படி யமைத்து
மின்ன தன்மைய னென்றிரு நிலத்து
முன்னே யறியா மூர்க்க மாக்களை
யின்னே கொண் டேகாக் கூற்றந்
தவறுபெரி துடைத்தே தவறுபெரி துடைத்தே

திருச்சிற்றம்பலம்.

---

கணபதி துணை.

# கோபப்பிரசாத உரை,

---

வணக்கம்.

தன்றேன் முகத்துச் சடையிற் பிறையணி
குன்றே யேற்குங் கூழையே னுரையே.

முன் உரை.

கோபப்பிரசாதம் என்னும் பிரபந்தம் (கஉ)
அடியினுள் (ஙகக) சீரமைந்த இணைக்குறளா சிரி

ப்பா ஒன்றே. அது பதினொராந் திருமுறையுள் நில
நின்றது. அதற்கு உரைதருதற்குப் போதிய அறி
ற்றல் சிறிதுமிலனேனும், நுண்மாண் நுழைபுல
டையார்க்கு ஓர் ஆராய்ச்சித் துணையாகவும் விழை
து பிழைபட வுரைப்போர்க்கு ஓர் மறுப்பு விளக்க
ாகவும் என்னறிவு சென்றளவில் மூத்தநாயனார்
ருள்கொண்டு உரைத்தேன். கோபம் பிரசாதம் என்
ன இறைவனரது கோபச்செயலும் அநுக்கிரகச்
சயலுமாம். கோபந்தானும் பிரசாதமேயெனத்
தளியவும் நின்றது. கோபம் அதனாற் செய்யப்படும்
ண்டத்தை யுணர்த்திற்று. இவ்விரண்டும் முறையே
றக்கருணை அறக்கருணை எனப்படும்.

கோபப்பிரசாத உரை.

1. பெரிது தவறு உடைத்து பெரிது தவறு
டைத்து என்றது.—பெரிதும் பிழையுடையது பெ
தும் பிழையுடையது என்பதாம். இத்துணைக்கோ
த்தோடும் கூறுவதனால் அஃதியாதெனத் தெளிய
வஃகினேன் என்பையேல், யாமுரைப்பதைக் கடை
பாக நூனெறியே ஒற்றித்துக்கேட்டுத் தெளியக்
டவாய். கோபத்தின் மிகுதிபற்றி அடுக்கிவந்தது.

2, வெள்திரை கரும் கடல் மேல் துயில்கொள் அண்டவாணனுக்கு ஆழி அன்று அருளியும் எ-து.—வெள்ளிய அலைகளைச்செய்யும் பெரிய பாற்கடற் பரப்பின்மேலே பாம்பணைப்பாயலில் உறக்கங்கொள்வனேனும் மேலண்டத்துள்ள வைகுண்டவாழ்க்கை கொண்ட திருநெடுமாலுக்குச் சக்கரப்படையை அக்காலத்திற் கொடுத்தருளியும் எ-ம். திருநெடுமால் ஆயிரந்தாமரை மலர்களால் அர்ச்சிக்கும விரதம் பூண்டு, அங்ஙனம் பூசிக்கின்றுழி, ஒருதினம் ஒரு மலர் குறையக்கண்டு அதை நிறப்பிக்கொள்ளத் தன் கண்ணொன்றினைப் பறித்துச் சாத்துதலும், சிவபெருமான் தாம் முன்னர்ச் சலந்தரனைக்கொன்ற சக்கரத்தை அத்திருநெடுமால் விரும்பிய வண்ணமே கொடுக்க எற்று அதனைத்தாங்கும் வலி தனக்கின்மையை விண்ணப்பித்துக்கொள்ள, உடனே பெண்பாகர் அச்சக்கரத்தைத் தமது நகநுனியால்வகிர்ந்து வட்டித்துக் கொடுத்தருளினார் என்பது சரித்திரம்.

3. உலகம் மூன்றும் ஒருங்கு உடன்படைத்த மலரோன் தன்னை வான்சிரம் அரிந்தும் எ-து.—மேல் கீழ் நடு வென்னும் உலகம் மூன்றினையும் ஒரேமுறையிற்றனே படைத்த தாமரை வாழ்க்கையோனாகிய

பிரமதேவனை அவன் ஐந்தலைகளில் உச்சித்தலையை நகநுனியாற்கொய்து அகந்தை அடங்கத் தண்டித்தும் எ-ம்.

4. கானவேடுவன் கண்பரிந்து அப்ப மற்று அவற்கு வானநாடு அருளியும் எ-து.—காட்டுவேடுவராகிய திண்ணனார் தமது கண்ணை இரக்க மீக்கொண்டு காளத்திக் கண்ணப்பனார் கண்ணினின்றும் பெருகுங்குருதி தடைப்படுமாறு அப்புதலும், அவ்வருஞ்செயல் புரிந்த கண்ணப்பநாயனாருக்கு முத்தியுலகந் தந்தருளியும் எ-ம்.

5. கடிபடு பூ கணை காமனார் உடல் பொடிபட விழித்தும் எ-து.—மணம்பொருந்திய ஐம்மலர்களாகிய அம்பினையுடைய மன்மதனாருடலம் நீறுபட்டொழிய நுதற்கண் விழித்துத் தண்டித்தும் எ-ம்.—[ஐம்மலர்களாவன—அசோகு மா முல்லை தாமரை நெய்தற் பூக்களாம்.]

6. பூதலத்து இசைந்த மாணுடன் ஆகிய சண்டியை வானவன் ஆக்கியும் எ-து.—நிலமிசையே பிறவியிற் பொருந்திய மாணுடவடிவினராகிய சண்டேசுர நாயனாரை அவ்வடிவுடனே தேவர்கள் வணங்

கும் பெருந்தேவனாக அநுக்கிரகம் புரிந்தும் எ-ம்.

7. மறிகடல் உலகின் மன் உயிர் கவரும் கூற்றுவன் தனக்கு ஓர் கூற்றுவன் ஆகியும் எ-து.—திரைகள் மறியும் கடல்சூழ்ந்த நிலத்தின் கணுள்ள உயிர்களைப்பற்றிச் செல்லும் இயமனுக்குத்தாம் மற்றோர் இயமனாகித் தண்டித்தும் எ-ம்.

8. கடல்படு நஞ்சம் கண்டத்து அடக்கியும் எ-து.—பாற்கடலி லுண்டாகிய காளகூடவிடத்தை தேவர்களைக் காத்தற்பொருட்டுத் தமது திருக்கண்டத்தில் அடக்கியருளியும். எ-ம்.

9. பருவரை சிலையாப் பாந்தள் நாண் ஆ திரிபுரம் எரியஒருகணை துரந்தும் எ-து.—மகாமேருமலையே வில்லாகவும்வாசுகி என்னும் பாம்பே நாணாகவும் கொண்டு மூவிடங்களின் மாறிமாறித்திரியும் மும்மதில்களும் எரியும்படி ஒரே பாணத்தைச் செலுத்தி அம்முப்புரவாசிகளைத் தண்டித்தும் எ-ம்.

இரும்பு வெள்ளி பொன் என்னும் மூன்றானும் இயைந்த மூன்றுகோட்டைகளும் தாருகாக்கன் கமலாக்கன் வித்தியுன்மாலி என்னும் அவற்றி னதிபர்கள் விரும்பியாங்கே தனித்தனி மேல் கீழ் நடு உலகங்க

ளில் மாறிமாறிப் பறந்துசென்று வைகுண்டமாதி வைப்புகளைப் பாழ்படுத்துங்கால், வாசுதேவன் முதலிய தேவர்கள் சிவசன்னிதியை அடைந்து ஸ்ரீ தக்ஷிணாமூர்த்தியின் மந்திர செப தியானங்களாற் பிரார்த்தித்த வழி, சிவபெருமான் மகாமேருவை வில்லாகவும், வாசுகியை நாணாகவும், அங்கி நுதியும் அரி அதன் முக்கோணவடிவும் காற்று காம்புவடிவுமாகப் பொருந்திய அம்பாகவும் எடுத்துக்கொண்டு, பூமியாகிய இரதத்தில் ஆரோகணித்துச்சென்று அந்தமூன்று கோட்டைகளையும் ஒரிடமாக்கித் திருப்புன்னகையால் எரித்தார். அப்பொழுது அவ்வில்லிற் கோத்த அம்புருவாயிருந்த தேவர்கள் தமக்கு யாதும் பயன் கிடைத்திலவே யென வருந்த, அஃதறிந்த பரமபதி அவர்களுக்குந் தோல்வியுறுவண்ணம் செலுத்தினார் என்பது சரித்திரசாரம்.

> "கல்லானிழற் கீழாயிடர் காவாயென வானோர்
> எல்லாமொரு தேராயயன் மறைபூட்டிநின் றுய்ப்ப
> வல்வாயெரி காற்றீர்க்கரி கோல்வாசுகி நாண்கல்
> வில்லாவெயி லெய்தானிடம் வீழிம்மிழலையே."

என்னுந் தேவாரமு மிதனை வற்புறுத்தும்.

10. கல்கொண்டு எறிந்தசாக்கியன் அன்புதற் கொண்டு இன்அருள்தான் மிக அளித்தும் எ-து.—செங்கற்களைக் கொண்டெறிதலே திருத்தொண்டாகச்செய்த சாக்கிய நாயனாரது இடையறாப் பேரன்பினைத் தாம் கைக்கொண்டு இனியபேரருளை அவருக்குப் பெரிதும் கொடுத்தருளியும் எ-ம்.

11. கூற்று எனத்தோன்றியும் கோளரி போன்றும் தோற்றிய வாரணத்து ஈர்உரி போர்த்தும் எ-து.—கதங்கொண்ட கோபத்தானே இயமனே எனும்படி யாகாக்கினியினின்று வெளிவந்தும் அண்ணுந்து புழைக்கரத்தைச் சுழற்றிவருதலானே யாளியை ஒத்தும் எதிரேவந்த யானையினது பருத்ததோலை உரித்துப் போர்வையிட்டுக் கிருத்திவாசராய் அதனைத் தவ்விடித்தும் எ-ம்.

12. நெற்றியிற் கண்ணும் நீள்புயம் நான்கும் நற்றூ நந்தீச்சுவரற்கு அருளியும் எ-து.—நெற்றியிலே கண்ணையும் நீண்ட நான்கு கரங்களையும் தம்மைப்போல நன்றாக நிலைபெறும்படி திருநந்தி தேவருக்குக் கொடுத்தருளியும் எ-ம்.

13. அறிவினை ஓரா அரக்கனுர் உடல் நெறநெற இறுதர ஒருவிரல் ஊன்றியும் எ-து.—பலவாற்றானும்

ஆராய்ந்தறிந்தே செய்யற்பாலதாந் தொழிற்றிறத்தை அங்ஙனம் ஆராய்ந்தறியாது திருக்கைலாச மலையைப் பெயர்க்குமாறு நிகலத்திற் றங்கிய இராவணனது உடம்பு நெறநெறவென்னும் ஓசையுடனே விரைவில் ஒடிந்தொழியும்படி தமது திருப்பாதத்தின் ஒருவிரனுனியால் அழுத்தித் தண்டித்தும் எ-ம்.

14. * திரு உருவக்கொடு செங்கண் ஏறும் அரி அன திண்திறல் அசுரனுக்கு அருளியும் எ-து.— தமது சாரூபத்துடனே சிவந்தகண்களையுடைய இடபவாகனத்தையும் வீரத்தாற் சிங்கேறுபோன்ற திண்ணியவலிய ஓரசுரனுக்குக் கொடுத்தருளியும் எ-ம்.

15. பல்கதிர் உரவோன் பல்கெடப் பாய்ந்தும் எ-து. பலகிரணங்களையுடைய ஞானத்தனாகிய சூரியனது பற்கள் உதிரும்படி உதைத்துத் தண்டித்தும் எ-ம்.

16. மல்கு பிருங்கி இருடிக்கு மாவரம் ஈந்தும் எ-து. சிவஞானம் நிறைந்த பிருங்கிமாவிருடிக்குப் பெருவரத்தைக் கொடுத்தருளியும் எ-ம்.

17 தக்கன் வேள்வி தகைகெடச் சிதைத்தும்

* இசசரித்திரமறிந்தா ருதவினன்றாம்.

எ-து.—தக்கன் கனகலத்திற்செய்த யாகமானது அழகுகெட்டொழியுமாறு அழித்து அவன்றலையை அறுத்துத்தண்டித்தும் எ-ம்.

18. மிக்கவரம் நந்திமாகாளர்க்கு அருளியும் எ-து.—கணங்கட்குத் தலைமையாகும் பெருவரத்தை நந்திமாகாள தேவருக்கு அநுக்கிரகித்தும் எ-ம்.

19. செந்தீக்கடவுள் தன் கரதலம் செற்றும் எ-து.—அக்கினிதேவனது கைகளைவெட்டி அவனைத் தண்டித்தும் எ-ம்.

20. பைந்தார் நெடும்படை பார்த்தற்கு அருளி யும் எ-து—பசிய வெற்றி மாலையணிந்த தமது பாசு பதப்படையை அருச்சுனனுக்குக் கொடுத்தருளியும் எ-ம்.

21. கதிர்மதிதனை ஓர்கால் பயன்கெடுத்தும் எ-து.—அமிர்த கிரணங்களையுடைய சந்திரனை ஒரு பக்ககாலத்திற் பயன்படாவாறு தேய்த்துத் தண்டித்தும் எ-ம்.

22. நிதிபயில் நீள்நகர் குபேரற்கு ஈந்தும் எ-து.—சங்கநிதிபத்மநிதிச் செல்வமோங்கும் நீண்ட அளகைப்பதியினை அழகிற்குறைந்த குபேரனுக்குக் கொடுத்தருளியும் எ-ம்.

23. சலந்தரன் உடலம் தான் மிகத்தடிந்தும் எ-து.—சலந்தராசுரனது உடம்பு தான் இருபிளவாமாறு பெரிது தண்டித்தும் எ-ம்.

24. மறையயில் மார்க்கண்டேயனுக்கு அருளியும எ-து.—வேதத்தைப் பயின்று அதன்பயனுஞ் சைவநெறி கடைப்பிடித்த மார்க்கண்டேய முனிவருக்கு இயமபயம போக்கி அநுக்கிரகித்தும் எ-ம்.

25. தாரகன் கொல்ல முன்காளியைப்படைத்தும் எ-து.—தாரகாசுரனைக் கொல்லும்படி முன்னொருகாலத்து காளிதேவியைத் தோற்றுவித்து அவனைத் தண்டித்தும எ-ம.

26. சீர்மலி சிலநதிக்கு இன் அரசு அளித்தும் எ-து —ஞானம் நிறைநத சிலந்திப்பூச்சிக்கு இனிய கோச்செஙகட் சோழனுகும் அரசுரிமையைக் கொடுத்தருளியும எ-ம்.

27. கார்மலி உருவக்கருடனைக் காய்ந்தும் எ-து. மேகவண்ணன் விளங்கும் அழகிய கருடனைக் கோபித்துத்தண்டித்தும் எ-ம்.

28. ஆலின்கீழ் இருந்து அறநெறி அருளியும் எ-து. வடவாலவிருக்ஷத்தின் கீழேவீற்றிருந்து சிவ

ஞானத்தைப் போதித்தருளியும் எ-ம்.

29. கூறும்காலை இன்னவை பிறவும் எங்கள் ஈசன் கோபப்பிரசாதம் எ-து.—ஆராய்ந்து சொல்லுமிடத்து இவையும் இவைபோல்வன பிறவுமாகச் செய்தருளியவெல்லாம் எமது தலைவராகிய சிவபிரானாது தண்டமும் அநுக்கிரகமுமாகும் எ-ம்.

30. கடிமலர் இருந்தோன் கார்க்கடல் கிடந்தோன் புடம் உறு சோலைப்பொன் நகர் காப்போன் உரைப்போர் எ-து. மணந்தங்கும் மலர்மிசையிருந்தோனாகிய பிரமதேவனையும் மேகங்கள் பருகும் பாற்கடற்கண்ணே படுக்கையிற் கிடந்தோனாகிய திருநெடுமாலையும் இலைப்பொறையான் வளைந்த கற்பகச் சோலை நீழலிலிருந்து தேவலோகத்தைக் காப்பவனாகிய இந்திரனையும் தனித்தனியே முதல் என்பாரும் எம்பிரானொடும் எண்ணிச் சமத்துவமுடையரென்பாரும் மற்றும் பல பிதற்றுவோரும் எ-ம்.

31. ஆகிலும் எ-து. மதத்தினரெனப்படுவரானாலும் எ-ம்.

32. ஒண்கடல் மா நீர் அங்கை கொண்டு இறைக்கும் ஆதன்போன்றுளர் எ-து. இவரெல்லாம் ஒள்

ளிய கடற் பெருநீரை உள்ளங் கையைக்கொண்டு இறைத்திடர்ப்படும் அறிவற்ற குருடனைப் போன்றவ ராவார் எ-ம்.

33. ஒடுங்காப்பெருமை உம்பர்கோனை அடங்கா ஐம்புலத்து அறிவு இல் சிந்தைக் கிருமி நாவால் கிளத் தும் பரமே எ-து. அளவைகளாலும் வேதமாகிய முதனூலினாலும் அளந்தறிய அடங்காத பெருமை யினையுடைய மகாதேவனைத் தம்வயப்படாத ஐந்திந் திரியங்களாலும் சடமாகிய மனதினாலும் புழுத்தநாவி னாலும் அங்ஙனம் சமத்துவமுடையரெனச் சொல்லுந் தன்மைத்தோ. எ-ம்.

34. அதாஅ அன்று எ-து. அதுவன்றியும் எ-ம். இதுகாறும புராணவசனம் பற்றிக்கூறி மேல் வேத வசனம்பற்றிக் கூறுகின்றார்.

35. ஒருவகைத் தேவரும் எ-து--தொகுதியான் ஒருவகைப் பட்டதேவரும் எ-ம்

36. இருவகைத் திறமும் எ-த.—ஆண் பெண் என்னும் இருவகையாற் பலதிறமும் எ-ம்.

37. மூவகைக்குணமும் எ-து—சத்துவ ராசத தாமத மென்னும் மூவகைக்குணமும் எ-ம்.

38. நால்வகை வேதமும் எ-து—இருக்கு யசுர் சாமம் அதர்வம் என்னும் நான்குவகைவேதமும் எ-ம்.

39. ஐவகைப் பூதமும் எ-து—பிருதுவி அப்பு தேயு வாயு ஆகாயம் என்னும் ஐந்துவகைத்தாய பூதமும் எ-ம்.

40. அறுவகை இரதமும் எ-து—இனித்தல் புளித்தல் கார்க்கல் கைத்தல் உவர்த்தல் துவர்த்தல் என்னும ஆறுவகை இரதமும் எ-ம்.

41. ஏழுவகை ஓசையும் எ-து—ச. ரி. க. ம. ப. த. நி. என்னும் ஏழுவகையான ஓசையும் எ-ம்.

42. எண்வகை ஞானமும் எ-து—மெய்வாய் கண்மூக்குசெவி என்னும் ஐந்து ஞானேந்திரியமும், அகங்காரம் சித்தம் புத்தி என்னும் மூன்றுகரணமு மாகிய எட்டுவகை ஞானமும எ-ம்.

43. ஒன்பதின் வகையும் ஒண்மலர்ச் சிறப்பும் எ-து—பிரகிருதியின் வகையும், அவ்வகைகளிற் பரிணமித்து விரிந்த தாத்துவிகவகைச் சிறப்பும் எ-ம். ஒன்பது என்றது எண்டுப் பிரகிருதியை.

44. பத்தின் வகையும் ஆகிய பரமனை எ-து—அவைடனைத்தையும் போக்கியமாகக் கொள்ளும் புரு

டன்வகையுமாகிய பரமசிவனை எ-ம். பத்து என்றது ஈண்டுப் புருடனை அகரவுயிர் எனையுயிரையும் மெய்யை யும் இயக்கற்கண் அவையே யானவாறு இவை பல வுந்தாமேயான பரமசிவனை என்றுணர்க. எண்கள் குறிப்புச் சொற்களின் பாலன. இதுகாறும் வேதவசனம் பற்றிக்கூறி மேற்சிவாகம வசனம் பற்றிக்கூறுகின்றார்.

45. நினைவோர்க்கு இன்பனை எ-து—நின்றாலும் இருந்தாலும் கிடந்தாலும் நடந்தாலும் மென்றாலும் துயின்றாலும் விழித்தாலும் இமைத்தாலும் மன்றுடும் மலர்ப்பாதம் மறவாதே நினைக்கும் சகச நிட்டைத் தொண்டருக்கு இன்பமேயா யிருப்பவரை எ-ம்.

46. என்னிடை அமுதினை எ-து—அங்ஙனமே அநுபவிக்கும் என்னிடத்தும் அமிர்தமாகத் தித்திப் பவரை எ-ம்.

47. செம்பொனை மணியினை எ-து—அத்தகைய சுவாநுபவத்திலே செம்பொன்னையும் மணியையும் போலக் களங்கமற விளங்குபவரை எ-ம்.

48. தேனினைப் பாலினை எ-து—தேனையும் பாலை யும் போலச் சுவைப்பவரை எ-ம்.

49. தஞ்சம் என்று ஒழுகும் தன அடியார்தம் நெஞ்சம்பிரியா நிமலனே எ-து—நின்னலாற் பற்று மற்றொன்றிலோம் நீயே தஞ்சமென்று சரியையாதி நாற்பாதவகையினின்று ஒழுகும் தமது மெய்யடியார்களது நெஞ்சத்தை விட்டகலாத நின்மலரை எ-ம்.

50. நீடு உயர் செந்தழல் பவளச்சேண் உறு வரையனே எ-து. மிக்கோங்கிய செந்தழன்மலைபோலவும் பவளமலைபோலவும் அடிமுடி காண்டற்கரிய அதிதூரமான எல்லையையுடையவரை எ-ம். எல்லையில்லாதவரென்றபடி..

51. முக்கண் செல்வனே எ-து.—அங்ஙனந் தூரத்தினராயினும் உயிர்கட்கு அண்ணியராயுபகரிக்கு மாறு மிளிரும் மூன்று கண்களை உடைமையாயுடையவரை எ-ம். முக்கண் சூரிய சோமாக்கினி என்பன.

52. முதல்வனே எ-து—கற்பனைகடந்த சோதியாகிய முதற் பொருளாயுள்ளவரை எ-ம்.

53. மூர்த்தியை எ-து—அந்தச சோதிதானே அடியவர்கள் வழிபடுமாறு வடிவமாயினவரை எ-ம்.

54. கள்ளம் கைவிட்டு உள்ளம் அது உருகிக் கலந்து கசிந்து தன்கழல் இணை அவையே சிந்திட

ஆங்கேதோன்றும் நிமலனை எ-து.—அவ்வழிபாடு செய்யிற் பயனுயாறு;—உண்டு போலின்றும் பண்பினதாகிய பிரபஞ்சத்தை அறவேவிட்டு ஆண்டு நசன் பிரமமென முனையாது உயிர தான் அனலிற்பட்ட மெழுகுபோலுருகி அங்கே வெளிப்படும் அருளிலே அப்பிலுடையுப்பே போலக் கலந்து அக்கலப்பாலே விளங்கும சிவசாட்குணத்தைத தன் குணமாகக் கொள்ளாது அவணடு நெருப்பிலிட்ட வெண்ணெய்ப் போலக் கசிந்து தமது வியாபகமாகிய திருவடிகளிரண்டையுமே தியானித்தலாகிய சிவோகம்பாவனையுறைத்து நிற்கும் அவ்விடத்தே பரமானந்தப் பெருமபயனுய் விளங்கும் மலரகிதனை எ-ம்.

55. தேவ தேவனை எ-து.—தேவரெனப்படுவார்க்கெல்லாம் பெருந்தேவனை எ-ம்.

56. திகழ்சிவ லோகனை எ-து--அங்ஙனம் வியாபிபாய பெருந் தேவராயினும் அத்தேவர்கள் வழிபட்டுய்யும்படி விளங்கும் சிவலோகத்தைத் தமதிடமாகவுடையவரை எ-ம.

57. பாவ நாசனை. எ-து.—அவர் தம் பாவம் போக்கலாலே அரன் உருத்திரனுதி நாமங்களை உடையவரா எ-ம்.

58. படர் ஒளி உருவனை எ-து.—அந்நாமங்கட்கேற்பப் பரவிய ஞானத்தையே திருமேனியாக உடையவரை எ-ம்.

59. வேயார் தோளி மெல் இயல் கூறனை எ-து.—அங்ஙனம் அரன் உருத்திரனாகிச் சங்கரிப்பவரேனும் மீட்டுந் தோற்றுவிக்கும் மூங்கிலையொத்த தோளினையுடைய மெல்லிய வியல்பினையுடைய கருணாசத்தியைப் பாகமாகவுடையவரை எ-ம்.

60. தாயாய் மன்உயிர் தாங்கும் தந்தையை- எ-து. அதற்கேற்பத் தாயாகி எவ்வுயிரையுங் காக்கும் பரம பிதாவானவரை. எ-ம்.

61. சொல்லும் பொருளும் ஆகிய சோதியை எ-து—அதனானே சொல்லும் பொருளும் போல அந்தச் சத்தியுந்தாமும் பேதாபேதமாக விளங்குபவரை எ-ம்.

62. கல்லும் கடலும் ஆகி அகண்டனை எ-து— அந்தச்சத்தியானே அவ்வுயிர்கள் போகந்துய்க்குமாறு மலையும் (நிலனும்) கடலுமாகி மறைத்து வியாபிக்கின்றவரை எ-ம்.—

63. தோற்றம் நிலை ஈறு ஆகிய தொன்மையை எ-து—இங்ஙனமே சிருட்டி திதி சங்காரம் திரோ

தானம் அநுக்கிரகமாகிய அநாதி ஐந்தொழிலு முடையவரை எ-ம்.

64. நீற்றிடைத்திகழும் நித்தனே எ-து—அவ் வைந்தொழிலுமுடைமையானே விகாரியாகாது அச் சராசரமனைத்தையும் தம்மிடத்தொடுக்கிய விபூதி யிடத்தே விளங்கும் அநாதி நித்தியரை எ-ம்.

65. முத்தனே எ-து—அங்ஙனமாயினும் அவற் றின் விருப்பு வெறுப்பற்ற அநாதி மலமுத்தரை எ-ம்.

66. வாக்கும் மனமும் இறந்த மறையனே எ-து—அதனானே பாசஞான பசுஞானங்களைக் கட ந்த அநாதி போதராயுள்ள வரை எ-ம். மறை ஈண் டிறின்மேற்று.

67. பூக்கமழ் சடையனே எ-து—அவ்விருஞா னத்தானும் அறியவாராராயினும் சிவஞானத்தானே யறியுமபடி மலர்மணங்கமழும் சடைமுடியாகிய அவ யிலாற்றலுடையவரை எ-ம்.

68. புண்ணியநாதனே எ-து — இக்குணமெலா முணர்ந்து வழிபடும் புண்ணியத்திற்குப் பயனாக யுள்ள தலைவரை எ-ம்.

69. இனைய தன்மையன் என்று அறிவரியவன் தனை எ-து—அங்ஙனம் வழிபடுவதேயன்றி இப்படி யன் இவ்வண்ணத்தன் இவனிறைவன் என்றெழுதிக் காட்ட முடியாமையின் அறிதற்கரியவனை எ-ம்.

70. முன் விட்டுத் தாம் மற்று நினைப்போர் எ-து—இங்ஙனம் முறையே புராணம் வேதம் ஆக மங்கள் தெரிக்கவும் அச்சிவமுதலையே முதலாகக் கொள்ளுதலைவிட்டுத் தாங்களாகப் பிறிதொன்றனை முதலாக உன்னுந் தீயூழாளர் எ-ம்.

71. மாமுயல் விட்டுக்காக்கை பின்போம் கல வர்போலவும் எ-து—பெருமுயலைப் பற்றுதலைவிட்டுக் காக்கையைப் பற்றும்படி பின்றொடர்ந்து செல்லும் வேட்டுவ வீரர் போலவும் எ-ம்.

72. விளக்கு அங்கிருப்ப மின்மினி கவரும் அரும் அளப்பு சிறப்பு இல் அதர் போலவும். எ-து.—வாடா விளக்குத் தமதில்லின் கண்ணே இருக்கவும் பிரகாசத்தை விரும்பி மின்மினியைப் பிடித்து வரும் அரிய அளவைச் சிறப்பாகிய அறிவுக் கண்ணில்லாத குருடரைப் போலவும் எ-ம்.—இவ்விரண் டுவமை களும் முறையே உடையானல்லானை யுடையானுகக் கோடற்கும் உடங்கே சிவஞான மிருந்துணர்த்தலை

துணராது பசுஞானத்தையே தேடுதற்குவமையா யின.

73. கச்சம் கொண்டு கடுங்தொழின் முடியாக் கொச்சைத் தேவரைத் தேவர் என்று எண்ணி எ-து.—துணிவுகொண்டு அரியதொரு கோபத்தை யேனும் பிரசாதத்தை யேனும் செய்ய முடியாத கீழ்மையினையுடைய ஏனைத்தேவர்களை முதற் கடவுள ராகக் கருதி எ-ம்.

74. பிச்சரைப் போல ஓர் ஆரியப் புத்தகப் பேய்கொண்டு புலம்புற்று எ-து.—அக்கருத்தை நிரப்புமாறு பித்தேறினார்கள் உழறுவதுபோல உயர் வாகியதொரு வேதத்தின் உட்பொருளை அறியாது பேய்போல ஆவேசங்கொண்டு பிதற்றிப் பிதற்றி எ-ம். பித்தேறினோர்கள் முன்னொடுபின்முரணிக் கூறற்கும்; பேய் இருக்கு யசுர் சாமம் அதர்வம் என்னும் நாற்பகுப்பில் இருக்கின் பிரிவாய இருபத் தொருசாகையினும் எசுரின் பிரிவாய நூற்றொரு சாகையினும் சாமத்தின் பிரிவாய ஆயிரஞ் சாகை யினும் அதர்வத்தின் பிரிவாய ஒன்பது சாகையினும் தாம் தாம் பற்றியதையே மலைந்து பொருள்கொண்டு நிற்றற்கும் உவமையாயின.

75. வட்டணை பேசுவர் எ-து.—தருக்கவுணர்வு கைவந்தவர் போல வளைய வளையச் சுட்க தர்க்கம் பேசுவர் எ-ம்.

76. மானுடம் போன்று பெட்டினை உரைப்போர் எ-து—.அறிவின் மதுகையின்மையானே கிளை கிளைத்த மரம்பழுத்த மானுடப்பழம்போலும் மனிதராய்த் தமது விருப்பத்தையே இங்ஙனம் பேசித் திரியுமிவர் எ-ம்.

77 பேதையர் எ-து—அறிவறைபோய ஏழையராவார் எ-ம்.

78. நிலத்து உன்தலை மீன்தலை எண்பலம் என்றால் அதனை அறுத்து நிறுப்போர் ஒருத்தர் இன்மையின் மத்திரம் ஆகுவர் எ-து. இத்தரையின் கண்ணே ஒருவன் மற்றொருவனைப் பார்த்து உனது தலை மீனினது தலையாயிருக்கின்றது நிறையும் எட்டுப்பல முளதென்றால் அங்ஙனமே அதனை அறுத்து நிறை செய்வோர் ஒருவரு மின்மையானே அவ்வளவிற்றமக்கே மீன்றலை வாய்த்ததென மகிழாநிற்பர் எ-ம். இது கருதப்பட்ட பொருளை மறைத்து அதனைப் புலப்படுத்தும் 'அதுபோன்ற பிறிதொன்றினைக் கூறியதனானே ஒட்டென்னும் அணி. கருதப்பட்ட பொருள் இத்தரை

பின் கண்ணே போலி ஆசானொருவன் அப்பேதையர் தம்மைப் பார்த்து உனது ஞானம் பிரமத்தினது ஞானமாயிருக்கின்றது அது சச்சிதானந்தமா மென்றால் அங்ஙனமே அதனை அறிந்து சொல்வோர் பிறர் ஒருவருமின்மையானே அவ்வளவிற்றமக்கே பிரமத் தன்மை வாய்த்தகதென மகிழாநிற்பர் எ-ம்.

79. மாநெறி கிடப்ப ஓர் சித்திரம் பேசுவர் எ-து—அம்மட்டோ! இன்னும் அவர் சத்தியவாதமாம் சைவத்திருநெறி யொன்றிருக்கவும் மெய்போலப் பொய்வாதத்தையும் 'புகலாநிற்பர் எ-ட.

80. தேவராகில் இன்னோர்க் காய்ந்தனர் இன்னோர்க்கு அருளினர் என்று அறிய உலகின் முன்னே உரைப்பது இல்லை எ-து—அவர் தாம்கொண்ட தேவரும் முதற்றேவராமாயின், அத்தேவர் இன்னரைத் தண்டித்தார் இன்னருக்கு அநுக்கிரகித்தார் என்று எல்லாரும் அறியும்படி உலகத்தின் முன்னிலையில் எடுத்துச் சொல்வதுமே இல்லை எ-ம்.

81. ஆகிலும் எ-து-அங்ஙனமாயினும் நீற்றொடு சாதனம் பூண்டவராய் எ-ம்.

82. ஆடுபோலக் கூடிநின்று அழைத்தும் எ-து.—ஆடுகள்கத்துவதுபோலக் கூட்டங்கூடி நின்று திருவுருத்திரத்தைக் கொண்டு மேமே என்று அழைத்தும் எ-ம். மேமே எனச் சமகத்தின் வருவதறிக.

[illegible] போல வேட்கை மீண்டும் எ-து
[illegible] திருவருத்திரன் சொல்லும் பொழுதும்
[illegible]ப் போல ஆசை வசப்படும் எ-ம்.

84. இப்படி ஞானம் அப்படி அமைத்தும் எ-து. —இந்தப் பூமியிலே அவ்வுருத்திரத்தின் உணர்ச்சிப் பொருளை அவ்வண்ணமே உணரும்படி ஆலயமாக அமைத்து வைத்திருக்கவும் எ-ம்.

85. இருநிலத்து இன்ன தன்மையன் என்று முன்னே அறியாமூர்க்க மாக்களை எ-து.—அவ்வால [illegible] பல நிறைந்த இந்த நிலவுலகத்திலே இன்ன தன்மையன் அவ்வுருத்திரநாதனாகிய பரசிவன் என்று முன்னர்த்தானே அறிந்துகொள்ளாத மூட மனிதரை. எ-ம்.

86. இன்னே கொண்டு ஏகாக்கூற்றம் பெரிது தவறு உடைத்து பெரிது தவறு உடைத்து. எ-து.—இப்பொழுதே பாசத்தாற் கட்டிக்கொண்டு செல்லாத கூற்றமானது பெரிதும் பிழையுடைத்து பெரிதும் பிழையுடைத்து. எ-ம்.

கண்டு அப்பிழை நிச்சயமென்பதனை [illegible] வந்தது.

கோபப்பிரசாத வுரை

முற்றிற்று

மெய்கண்ட தேவன் திருவடி வாழ்க



உ

கணபதி துணை.

திருச்சிற்றம்பலம்.

# மருதூரந்தாதி.

தலமலைகண்டதேவர்
இயற்றியது.

இஃது
யாழ்ப்பாணத்து நல்லூர்

## ஆறுமுகநாவலரவர்கள்

செய்த உரையுடன்
மேற்படியூர்
சதாசிவப்பிள்ளையால்

சென்னபட்டணம்:
வித்தியாநுபாலனயந்திரசாலையில்
அச்சிற்பதிப்பிக்கப்பட்டது.

இரண்டாம் பதிப்பு.

இதன்விலை அணா - ௪.



1882.

கணபதி துணை.

திருச்சிற்றம்பலம்.

# மருதூரந்தாதி

## மூலமும் உரையும்.

---

### காப்பு.

ஒருகொம் பிருபத மும்மத நால்வா யொரைந்துகரம்
பெருகுஞ் செவிசிறு குங்கண் புகர்முகம் பெற்றதந்தி
முருகன் றமைய னுமைமைந்த னைந்து முகன்மகன்மாஎ
மருகன் றுணைநம் மருதூரந் தாதி வருவிக்கவே.

இதனது பதப்பொருள். ஒரு கொம்பு - ஒருகோட்டை யும்—இரு பதம் - இரண்டு திருவடிகளையும்—மும்மதம் - மூன்று மதங்களையும்—நால் வாய் - தூங்குகின்ற வாயையும்—ஒரைந்து கரம் - ஐந்து கைகளையும்—பெருகும் செவி - பெருத்த காதுகளையும்—சிறுகும் கண் - சிறுத்த கண்களையும்—புகர் முகம் - புற்கென்ற நிறத்தையுடைய முகத்தையும்—பெற்ற தந்தி - பெற்ற யானையும்—முருகன் தமையன் - முருகக்கடவுளுக்குத் தமையனும்—உமை மைந்தன் - பார்ப்பதி தேவியாருக்குக் குமாரரும்— ஐந்து முகன் மகன் - ஐந்துமுகங்களையுடைய சிவபெருமானுக்குப் புதல்வரும்—மால் மருகன் - விட்டுணுவுக்கு மருமகனுமாகிய விநாயகக்கடவுள்—நம் மருதூர் அந்தாதி வருவிக்கத் துணை - நம்முடைய மருதூரந்தாதியைச் செய்தற்குத் துணையாவர். என்றவாறு.

திருப்பங்கையத்தநம்மாதுக்களித்தவன்செந்துவர்வாய்த்
திருப்பங்கையத்தன்புகூர்மருதூரன்றிரையெழுந்த
திருப்பங்கையத்தனவாகத்தனுன்முகன்றெம்முன்மழுத்
திருப்பங்கையத்தனிருப்பனென்னெஞ்சிற்றிருக்கறவே.

(இ-ள்.) திரு அத்தம் பங்கை நம் மாதுக்கு அளித்தவன் - அழகையுடைய பாதியாகிய பாகத்தை நம்முடைய உமாதேவியாருக்குக் கொடுத்தவரும்—செம் துவர் வாய்த் திருப் பங்கயத்து அன்பு கூர் மருதூரன் - செம்பவளம்போலும வாயையுடைய இலக்குமி தாமரைமலரின்கண் அன்பு மிகுந்திருக்கப்பெற்ற மருதூரையுடையவரும்— திரை எழுந்து அதிர் அம் கயத்து உப்பு அன ஆகத்தன் நான்முகன் - அலை எழுந்து ஒலிக்கின்ற நீரையுடைய ஆழமாகிய கடலைப் போன்ற சரீரத்தையுடைய விட்டுணுவுக்கும் பிரமனுக்கும்—தெவ் முன் மழுத் திருப்பு அம் கை அத்தன் - பகைவராயுள்ளார்கட்கு எதிரே மழுப்படையைத் திருப்புகின்ற அழகிய கையையுடைய பிதாவுமாகிய சிவபெருமான்—என் நெஞ்சில் திருகு அற இருப்பன் - என் மனதின்கண்ணே குற்றம் நீங்கும்வண்ணம் எழுந்தருளியிருப்பர். எ-று. கயம்-ஆழம் உப்பு-கடல். அன்ன அன என இடைக்குறைந்து நின்றது. (௪)

திருக்கண்டநம்புமடியார்க்கொட்டாதசிவன்கரிய
திருக்கண்டனந்தமருதூரன்வெற்பினிற்றிங்கள்செக
திருக்கண்டநத்தினுநத்தார்தவழுஞ்சிறைக்குமிக்கத்
திருக்கண்டநண்பனங்கேவக்ததாலறத்திர்ந்தவனே.

(இ-ள்.) நம்பும் அடியார்க்குத் திருக்கு அண்ட ஓட்டாத சிவன் - (தம்மை) விரும்பும் அடியவர்கட்குக் குற்றம் அணுக விடாத சிவபிரானும்—கரிய திருக் கண்டன் - கரிய அழகிய கழுத்தையுடையவருக்—நந்தம் மருதூரன் வெற்பினில் - நம்முடைய மருதூரையுடையவருமாகிய கடவுளுடைய

மலையின் கண்ணே—திங்கள் செங்கதிர் உக்கு அண்டம் நந்தி னும் - சந்திரனும் சூரியனும் உதிர்ந்து அண்டங்கள் கெடி னும்—கந்தர் தவமும் சிதைக்கும். இந்தத் திரு - கெடாதா ராகிய முனிவருடைய தவத்தையும் கெடுக்கின்ற. இந்தப்பெ ண்ணை—கண்ட நண்பன் அங்கே வந்ததால் அறத் தீர்ந்த வன் - கண்ட சிநேகன் அங்கே வந்தமையால் மிகத் தெளிந் தவன். எ-று. [பாங்கன் தலைவனை வியத்தல்.] (உ)

தவனனிலங்கமலமலராமயன்சந்திரன்மா
தவனனிலங்கமலமொருகால்வெம்மைத்தன்மைகுன்று
தவனனிலங்கமலனவையாமவன்சாரவொண்ணு
தவனனிலங்கமலன்மருதூரன்சரணமக்கே.

(இ - ள்.) தவனன் - சூரியனும்—இலம் கமலமலர் ஆம் அயன் - வீடு தாமரைமலராகப்பெற்ற பிரமனும்—சந்திரன் - சந்திரனும்—மாதவன் - விட்டுணுவும்—நல் நிலம் - நன்மை யாகிய பூமியும்—கமலம் - நீரும்—ஒருகால் வெம்மைத் தன்மை குன்றுதவன் - ஒருகாலத்திலும் வெம்மையாகிய குணம் நசிக் கப்பெறுதவனாகிய அக்கினியும்—அனிலம் - காற்றும்—கம் அலன் - ஆகாயமும் அல்லாதவராயும்—அவை ஆமவன் - அவைகளாவோராயும்—சார ஒண்ணுத வனன் - அடைய வொண்ணுத சுகோட்டையுடையவராயும்—இலங்கு அமலன் - விளங்காநின்ற மலமுத்தராயும்—மருதூரன் - மருதூரையுடை யவராயுமுள்ள சிவபெருமான்—நமக்குச் சரண் - நமக்குப் புகலிடம். எ-று. வனம் - சுகோடு. (௩)

தமனைத்திரியனைநஞ்சென்னக்கொதித்தெம்மைசாடிமே
வமனைத்தியானமின்புறத்தெல்லைசெல்குமுக்கண்குவையா
வமனைத்தியானனனைத்தப்பத்தர்க்கென்றுநல்லவனே
மனைத்தியானஞ்செய்வார்மருதுறைநாயகனே.

(இ - ள்.) நமன் அத்தி ஆன நஞ்சு என்னக் கொதித்து எம்மை நாடுமுன் - இயமன் கடலில் உண்டாகிய விடம் போலக் கோபித்து நம்மைத் தேடுமுன்னர்—நம் மனம் தியானம் இன்பமுறல் செல்ல நல்கு - நமது மனதினாலே செய்யப்படும் தியானம் உம்மிடத்தே செல்லும்வண்ணம் அருள்செய்யும்,—மூந்நான்கு கை ஆன மன் - பன்னிரண்டுதிருக்கரங்கள் (தமக்கு) உண்டாகப்பெற்ற தலைவராகிய முருகக்கடவுளுக்கும்—அத்தி ஆனனன் அத்த - யானையினது முகத்தையுடையவராகிய விநாயகக்கடவுளுக்கும் பிதாவே,—பத்தர்க்கு என்றும் நல்லவனே - அன்பர்கட்கு எந்நாளும் நல்லவரே,— நம - (உமக்கு) வணக்கம்,—நத்து யானம் செய் வார் மருதூர் உறை நாயகனே - சங்குகள் ஊர்தலைச் செய்கின்ற நீரையுடைய மருதூரின்கண் எழுந்தருளியிராநின்ற தலைவரே.எ-று. யானம் - ஊர்தல். வார் - நீர். (ச)

அகனகத்தானத்தடிவீழ்ந்தலறவடியொன்றினு
யகனகத்தானத்தநாலைந்திறுனையடர்த்தவன்றா
யகனகத்தான்மதில்சூழ்மருதூரையடைபவரே
யகனகத்தாங்ஙனைத்தைம்புலத்துன்பமறுப்பவரே.

(இ - ள்.) அகல் நகம் தானத்து அடி வீழ்ந்து அலற - பரந்த (கைலாச) மலையாகிய இடத்தினது அடியின்கண் விழுந்து கதறும்வண்ணம்—அடி ஒன்றின் நாயகம் நகத்தான் அத்தம் நாலைந்திறுனை அடர்த்தவன் - ஒருபாதத்திலுள்ள பெருவிரனகத்தினால் இருபதுகைகளையுடையவனாகிய இராவணனை வருத்தினவராகிய சிவபெருமானுடைய—தூய. கனகத்தான் மதில் சூழ் மருதூரை அடைபவரே - சுத்தமாகிய பொன்னினாலே மதில்கள் சூழப்பெற்ற மருதூரைச் சேர்பவரே—அகன் நகத் தாம் கிளைத்து - (தம்) மனம் மலரும்வண்ணம் தாம் சித்தித்து—ஐம்புலம் துன்பம் அறுப்பவர் - ஐம்புல

ங்களாலாகிய துன்பங்களை ஒழிப்பவர். எ-று. சிவபெருமானுடைய மருதூரையெனக் கூட்டுக. (௫)

அறுகாலனஞ்செறிவார்மருதூரரையாழியின்பா
லறுகாலனஞ்சமர்கண்டரைத்தொண்டரையாள்பவரை
யறுகாலனஞ்சொரிவேள்வியினல்வணங்கன்பர்க்கரு
ளறுகாலனஞ்சவருகாலமுமோரலைவில்லையே.

(இ - ள்) அறுகால் அனம் செறி வார் மருதூரரை - வண்டுகளும் அன்னங்களும் நெருங்குகின்ற நீரையுடைய மருதூரையுடையவரும்—ஆழியின்பால் அறுகாலன் நஞ்சு அமர் கண்டரை - கடலினிடத்துள்ள சேடனுடைய விடம் பொருந்திய கழுத்தினையுடையவரும்—தொண்டரை ஆள்பவரை - அடியார்களை ஆள்பவருமாகிய சிவபெருமானை—அறுகு ஆல் அனம் சொரி வேள்வியினால் வணங்கு அன்பர்க்கு - அறுகையும் ஆலஞ்சமித்தையும் அன்னத்தையும் சொரிகின்ற யாகத்தினால் வணங்குகின்ற பத்தர்களுக்கு,—அருள் அறு காலன் அஞ்ச வரு காலமும் - கருணை அற்ற இயமன் அஞ்சும் வண்ணம் வருகின்ற காலத்திலும்,—ஓரலைவு இல்லை - ஒருதுன்பமும் இல்லை. எ-று. (சு)

அலையம்புயங்கமணிமுடியான்கொன்றையந்தொடைய
லலையம்புயன்மருதூர்வைகைநாட்டினிலாலைவிற்பை
யலையம்புயங்கும்விளைபோய்த்துயருமகல்கைக்குவந்
தலையம்புயமலர்ப்பான்றொலைப்பானென்றறிவையரே.

(இ - ள்.) அலை அம் புயங்கம் அணி முடியான் - திரையையுடைய கங்காசலத்தையும் பாம்பையும் அணிந்த முடியையுடையவரும்—அம் கொன்றைத் தொடையல் அலை அம்புயன் - அழகிய கொன்றைமாலை அசைகின்ற அழகிய புயத்தையுடையவருமாகிய சிவபெருமானுடைய—மருதூர் வைகை நாட்டினில் - மருதூரைத் தன்னிடத்துடைய வைகைநா

சூழ்ந்த நாட்டின்கண்ணே—ஆலை வில் பையல் ஐயம்பு உயங்கும் வினை போய் - கருப்புவில்லையுடைய சிறுவனாகிய மன்மதன் ஐந்துபாணங்களினால் (என்னை) வருத்துகின்ற தொழில் நீங்கி—துயரும் அகல்கைக்கு-துன்பமும் ஒழிதற்பொருட்டு—அலை அம்புயம் அலர்ப்பான் என்று வந்து தொலைப்பான் - இவ்விரவைத் தாமரைமலரை அலர்த்துவோனாகிய சூரியன் எப்பொழுது வந்து போக்குவான்,—அரிவையரே - பெண்களே. எ-று. நான்காமடியில் அல்லையென்பது அலையென இடைக்குறைந்து நின்றது. [இரவினீட்டம்.] (எ)

அரியரவிந்தன்புகழ்மருதூருறையையன்றுய்ய
வரியரவிந்தம்புனைவோன்சிலம்பினதர்மனித
ரரியரவிந்தமதமாவினையமராகுலத்துக்
கரியரவிந்தமுயலூன்றின்றேகுமவதரித்தே.

(இ - ள்.) அரி அரவிந்தன் புகழ் மருதூர் உறை ஐயன் - விட்டுணுவும் பிரமனும் புகழும் மருதூரின்கண் எழுந்தருளியிராநின்ற பிதாவும்—தூய்ய அரி அரவு இந்து அம் புனைவோன் - சுத்தமாகிய அக்கினியையும் பாம்பையும் சந்திரனையும் கங்காசலத்தையும் அணிபவருமாகிய சிவபெருமானுடைய—சிலம்பின் அதர் - மலையினிடத்ததாகிய வழியின்கண்ணே—மனிதர் அரியர் - மனிதர்கள் அரியர்கள்;—அ விந்தம் மதம் மாவினை அமரா - அந்த விந்தமலைபோலும் மதத்தையுடைய யானைகள் தந்தொழிலின் அடங்காவாம்;—குலத்துக்கு அரியர் - குலத்தின்கண்ணே (நாம்) மேலோர்;—அவதரித்து அவிந்த முயல் ஊன் தின்று ஏகும் - (நீங்கள் இங்கே) தங்கி வெந்த முயலிறைச்சியை உண்டு (நாளைப்) போங்கள். எ-று. [விருந்து விலக்கல்.] (அ)

அவதரிக்கும்புகழ்மாமருதூரனென்னைம்புலனு
யவதரிக்கும்பகைசெற்றுளானவெற்பினூழல்வா

யவதரிக்கும்பசுந்தேனூந்தருஞ்சொலமுதொழுகி
யவதரிக்கும்பொருக்கப்படைத்தான்கமலாலயனே.

(இ - ள்.) அவ்தரிக்கும் புகழ் மா மருதூரான் - தங்கு கின்ற கீர்த்தியையுடைய பெரிய மருதூரையுடையவரும்—என் ஐம்புலன் ஆய் அவதரிக்கும் பகை செற்று ஆள் ஆரன் - என்னுடைய ஐம்புலன்களாய்ப் பிறக்கும் பகையைக் கெடுத்து ஆண்டருளும் அரனென்னுந் திருநாமத்தையுடையவருமாகிய சிவபெருமானுடைய—வெற்பின் ஆர் அழல் வாய அதர் - மலையின் கண்ணே நிறைந்த அக்கினியைத் தன்னிடத்துடைத்தாகிய வழியை,—இக்கும் பசுந்தேனும் தரும் சொல் அமுது ஒழுகிய அதரிக்கும் - கருப்பஞ்சாற்றையும் பசுந்தேனையும் போலும் சொல்லாகிய அமுதம் ஒழுகப்பெற்ற அதரத்தையுடையவளாகிய பெண்ணுக்கும்,—பொருக்கப் படைத்தான் கமலாலயன் - பொறுக்கும்படி படைத்தனன் பிரமன். எ-று. [பின் சென்ற செவிலி இரங்கல்.] (கூ)

ஆலையனங்கனெய்யாமனெஞ்சேநம்மையன்பர்சிந்தை
யாலயனங்கமங்கத்தணிவோனரனாமனி
யாலையனங்கம்வருந்தியுந்தேடற்கரியவனை
யாலையனங்கண்டோன்மருதூரனடிவணங்கே.

(இ - ள்.) நெஞ்சே - மனமே,—ஆலை அனங்கன் நம்மை எய்யாமல் - கருப்புவில்லையுடைய மன்மதன் எம்மை எய்யாவண்ணம்,—அன்பர் சிந்தை ஆலயன் - பத்தர்களுடைய இருதயமாகிய திருக்கோயிலையுடையவரும்—அங்கம் அங்கத்து அணிவோன் - எலும்பைத் திருமேனியிலே தரிப்பவரும்—அரன் - அரனென்னுந் திருநாமத்தையுடையவரும்—ஆர் அமளி ஆல் ஐயன் அங்கம் வருந்தியும் தேடற்கு அரியவன் - தங்கிய சயனம் ஆலிலையாகக் கொண்ட விட்டுணு சரீரம் வருத்தமுற்றும் தேடிக் காண்பதற்கு அரியவனை,—[illegible] அயன்

அம்கம் கொண்டோன் - திருக்கரத்தினாலே பிரமனுடைய அழகிய தலையை அறுத்துக்கொண்டவரும்—மருதூரன் அடி வணங்கு - மருதூரையுடையவருமாகிய சிவபெருமானுடைய திருவடிகளை நீ வணங்குவாயாக. எ-று. எய்யாவண்ணம் சிவபெருமானுடைய திருவடிகளை நீ வணங்குவாயாகவெனக் கூட்டுக. (௧௦)

வணங்கரியார்தமக்கன்பற்றவரன்றுவன்றொண்டர்க்கா
வணங்கரியார்முன்புகாட்டவல்லார்கையும்வாயுஞ்செய்ய
வணங்கரியாரயன்காண்பரியார்மருதூரரைங்கை
வணங்கரியார்தந்தையாரெந்தையாரெம்மனத்தவரே.

(இ - ள்.) வணங்கு அரியார்தமக்கு அன்பு அற்றவர் - (தம்மை) வணங்குதல் அரியராயினாருக்கு அன்பு இல்லாதவரும்—அன்று வன்றொண்டர்க்கு ஆவணம் கரியார் முன்பு காட்ட வல்லார் - அக்காலத்திலே சுந்தரமூர்த்திநாயனாருக்கு அடிமையோலையைச் சாக்ஷிகளெதிரே காட்ட வல்லவரும்—கையும் வாயும் செய்ய வணம் கரியார் அயன் காண்பு அரியார் - கையும் வாயும் சிவந்தவராய் (உடம்பு) நிறம் கரியவராயுள்ள விட்டுணுவும் பிரமனும் காண்டற்கு அரியவரும்—மருதூரர் - மருதூரையுடையவரும்—ஐங்கை வன் நம் கரியார் தந்தையார் - ஐந்து திருக்கரங்களையும் கொடையையுமுடைய நம்முடைய யானைமுகக்கடவுளுக்குப் பிதாவும்—எந்தையார்- எமக்குப் பிதாவுமாகிய சிவபெருமான்—எம்மனத்தவர் - மம திருதயத்தின்கணுள்ளவர். எ-று. (௧௧)

மணமாறுகைக்கெம்மைவந்தாளுநாதன்வரம்பெறவா
மணமாறுகைக்குத்திருவாயிற்கோபுரமாமருதூர் [ர்த்தா
மண்மாறுகைக்கொண்டடிக்கின்றோன் கொன்றைமாமல
மணமாறுகைக்குஞ்சடையானென்வினைமாறுமன்றே.

(இ - ள்.) மனம் ஆறுகைக்கு வந்து எம்மை ஆளும் நாதன் - நமது நெஞ்சம் ஆறுதற்பொருட்டு வந்து நம்மை ஆண்டருளும் தலைவர்—வரம் பெற வாமனம் மால் துகைக்கும் திருவாயில் கோபுரம் மா மருதூர் மன் - வரத்தைப் பெறுதற் குக் குறளுருக்கொண்ட விட்டுணு சஞ்சரிக்கின்ற திருவாயிலை யுடைய கோபுரத்தையுடைய பெரிய மருதூருக்கு அரசர்— அம் மாறு கைக் கொண்டு அடிக்க நின்றோன் - அழகிய பிர ம்பைக் கையிற்கொண்டு (பாண்டியன்) அடிக்க நின்றவர்— மா கொன்றை மலர்த் தாமன் - பெரிய கொன்றைப்பூவினாலே தொடுக்கப்பட்ட மாலையையுடையவர்—அம் ஆறு உகைக்கும் சடையான் என - சலத்தையுடைய நதி ஓடாநின்ற சடையை யுடையவர் என்று சொல்ல,—அன்றே வினை மாறும் - அப் பொழுதே வினைகள் நீங்கிவிடும். எ - று. (௧௨)

மாறாமதிக்கமறலியைச்செற்றவன்வஞ்சமென்று
மாறாமதிக்கபடர்க்கொளிப்பானரன்வண்ணவளை
மாறாமதிக்கமறுகூடுசென்றவன்மாமருதூர்
மாறாமதிக்கநந்தேர்முந்துமாயின்வலவநன்றே.

(இ - ள்.) மாறா மதிக்க மறலியைச் செற்றவன் - விரோ தமாகத் தருக்குற இயமனைக் கொன்றவரும்—வஞ்சம் என் றும் மாறா மதிக் கபடர்க்கு ஒளிப்பான் - வஞ்சகம் எந்நாளும் நீங்காத புத்தியையுடைய கபடர்களுக்கு ஒளிப்பவரும்— அரன் - அரனென்னுந் திருநாமத்தையுடையவரும்—வண் ணம் வளை மாறா மதிக்க மறுகு ஊடு சென்றவன் - பலநிறங்க ளையுடைய வளையல்களை விற்றுக்கொண்டு (கண்டவர்) மதிக்கும் வண்ணம் (மதுரை) வீதியினிடத்தே திரிந்தவருமாகிய சிவபெ ருமானுடைய—மா மருதூர் - பெரிய மருதூரின்கண்ணே— மால் தாமதிக்க நம் தேர் முந்துமாயின் - மேகம் தாழ்க்க நமது தேர் முற்பட்டுச் செல்லுமாயின்,—வலவ நன்று - தேர்ப் பாகனே, நல்லது: எ-று. [தலைவன் பாகனொடு சொல்லல்.]

வலவம்படமழுவேந்தியவேந்தவரித்தசித்திர
வலவம்படவளருந்தனபாரமலைமகள்கா
வலவம்படர்பொழில்சூழ்மருதூரமதன்விரக
வலவம்படவரும்போதென்னையாளவரவல்லையே.

(இ - ள்.) வலவம் பட மழு ஏந்திய வேந்த - (பகைவருடைய) வலிமை அழியும் பொருட்டு மழுப்படையைத் தாங்கிய இறைவரே,—வரித்த சித்திரம் வல் அவம் பட வளரும் தன பாரம் மலைமகள் காவல - எழுதப்பட்ட அழகையுடைய சூதாடு கருவி குற்றத்துட்படும்வண்ணம் வளராநின்ற தனபாரங்களையுடைய பார்ப்பதிதேவியாருக்கு நாயகரே,—வம்பு அடர் பொழில் சூழ் மருதூர - மணம் நெருங்கிய சோலை சூழ்ந்த மருதூரையுடையவரே,—மதன் விரகம் வலம் அம்பு அட வரும்போது - மன்மதனுடைய காமநோயை விளைக்கும் வெற்றியையுடைய பாணங்கள் கொல்ல வரும்பொழுது—என்னை ஆள வல்லை வர - என்னை ஆண்டருளுதற்கு விரைவிலே வருவீராக. எ-று. முதலடியில் வல்லவம் வலவமென இடைக்குறைந்து நின்றது. வரவென்பது அகரவீற்று வியங்கோள்முற்று. [பிரிவாற்றா நாயகி கூறல்.] (௧௪)

வலையலைவார்முலைபூங்குழலாக்கொண்டமங்கைபங்கா
வலையலைவார்விடவல்லவனேமருதூரவெண்க
வலையலைவார்மனநின்பாற்புரிந்தனண்மாயஞ்செய்ய
வலையலைவாரையனேசெய்யபாதமலர்தூவே.

(இ - ள்.) வலை அலை வார் முலை பூம் குழல் ஆக் கொண்ட மங்கை பங்கா - சூதாடுகருவியையும் இருளையும் கச்சையுமணிந்த தனமும் பூவை முடித்த கூந்தலுமாகக் கொண்ட உமாதேவியாரைப் பாகத்திலுடையவரே,—வலை அலை வார் விட வல்லவனே - வலையைத் திரையினுடைய கடலின்கண் விடுதற்கு வல்லவரே,—மருதூர - மருதூரையுடையவரே,—என்

கலை அலைவு ஆர் மனம் நின்பால் புரிந்தனன் - என்னுடைய கலையும் துன்பமும் நிறைந்த நெஞ்சத்தை உம்மிடத்தே ஆக்கினேன்,—மாயம் செய்ய வலை அலை - மாயத்தைச் செய்தற்கு வல்லிரல்லிர்,—வார் ஐயனே - நேர்மையையுடைய பிதாவே,—செய்ய பாதம் மலர் தா - சிவந்த திருவடித்தாமரை மலர்களைத் தருவீராக. எ - று. முதலடியில் வல்லை அல்லை என்பனவும் நான்காமடியில் வல்லை அல்லை என்பனவும் இடைக்குறைந்து நின்றன. (கரு)

மலரம்பையாரஞ்சொரியாலைவிற்கொண்டுமாரனெய்யா
மலரம்பையாரஞ்சம்வஞ்சிக்கருள்கிலர்மாலையைய
மலரம்பையாரஞ்செறியாகர்பார்த்தற்குவாய்த்தவெற்றி
மலரம்பையாரஞ்சடையார்மருதவனத்தவரே.

(இ - ள்.) மலர் அம்பை ஆரம் சொரி ஆலை விற்கொண்டு மாரன் எய்யாமல் - புட்பபாணங்களை முத்தினைச் சொரிகின்ற கருப்புவில்லைக்கொண்டு மன்மதன் எய்யாவண்ணம்—அரம்பையார் அஞ்சும் வஞ்சிக்கு மாலையை அருள்கிலர் - தெய்வப்பெண்கள் அஞ்சுகின்ற பெண்ணுக்கு மாலையைக் கொடுக்கின்றிலர்,—அமலர் - மலமுத்தரும்—அம் பை ஆரம் செறி ஆகர் - அழகிய படத்தையுடைய(பாம்பாகிய)ஆபரணம் நெருங்கிய திருமேனியையுடையவரும்—பார்த்தற்கு வாய்த்த வெற்றி மலர் - அருச்சுனனுக்குப் பொருந்திய வெற்றியையுடையு மல்லரும்—அம் பை ஆர் அம் சடையார் - கங்காசலத்தால் நிறைந்த அழகிய சடையையுடையவரும்—மருதவனத்தவர் - மருதவனத்தில் எழுந்தருளியிருப்பவருமாகிய சிவபெருமான். எ-று. நான்காமடியில் மல்லர் மலர் என இடைக்குறைந்து நின்றது. (கக)

வனத்தவனம்பன்மலர்க்கஞ்சத்தூர்மருதூரன்செய்ய
வனத்தவனம்பன்னிருகரத்தானந்தன்மாயமெய்வேம்

வனத்தவனம்பணைசப்பணியான்சதுர்மாமறைய
வனத்தவனம்பனெனச்சொலப்போமும்மலங்களுமே.

(இ - ள்) வனத்த அனம் பல் மலர்க்கஞ்சத்து ஆர் மரு தூரான் - நீரினிடத்தனவாகிய அன்னங்கள் பலதாமரைப்பூக்களின்மீது தங்கும் மருதூரையுடையவரும்—செய்ய வனத்தவன் - செய்ய நிறத்தையுடையவரும்—நம் பன்னிருகரத்தான் அத்தன் - நம்முடைய பன்னிரண்டுதிருக்கரங்களையுடைய முருகக்கடவுளுக்குப் பிதாவும்—மாயம் மெய் வேம் வனத்தவன் - மாயமாகிய சரீரம் வேகின்ற சுடுகாட்டையுடையவரும்—அம் பணகம் பணியான் - அழகிய சருப்பாபரணத்தையுடையவரும்—மா சதுர் மறையவன் நத்தவன் நம்பன்- பெரிய நான்குவேதங்களையுடைய பிரமனுக்கும் சங்கையுடைய விட்டுணுவுக்கும் கடவுளுமாகிய சிவபெருமான்—எனச் சொல - என்று சொல்ல,—மும்மலங்களும் போம் - மூன்று மலங்களும் நீங்கிவிடும். எ-று. (கள)

மலங்குவளைக்குநடுவேதுயிலும்வயலிற்செங்க
மலங்குவளைக்குண்மலர்மருதூரநின்மாலைபெறு
மலங்குவளைக்குங்கடலோசைகேட்டுவருந்திநெஞ்ச
மலங்குவளைக்குங்குமப்புயத்தாண்முக்கண்மைக்கண்டனே

(இ - ள்.) மலங்கு வளைக்கு நடுவே துயிலும் வயலில் - மலங்குமீன் சங்குகளுக்கு நடுவே கண்வளராநின்ற வயல்களினிடத்தே—செங்கமலம் குவளைக்குள் மலர் மருதூர - செந்தாமரைகள் குவளைகளுக்கிடையே மலர்கின்ற மருதூரையுடையவரே,—நின் மாலை பெறுமல் - உம்முடைய மாலையைப் பெறாது—அம் கு வளைக்கும் கடல் ஓசை கேட்டு வருந்தி நெஞ்சம் மலங்கு உவளை - அழகிய பூமியைச் சுற்றுகின்ற கடலினது ஒலியைக் கேட்டு வருத்தமுற்று மனம் கலங்குகின்ற உந்தப் பெண்ணை—குங்குமம் புயத்து ஆள் - குங்குமத்தை

யணிந்த (உம்முடைய) புயங்களினாலே ஆண்டருளும்,—மூக் கண் மைக் கண்டனே - மூன்றுகண்களையும் கரிய கழுத்தை யுமுடையவரே. எ-று. [பாங்கி கூறல்.] (கஅ)

கண்டங்களிக்கும்படிநஞ்சமுதுண்டகாரணவ
கண்டங்களிக்குமுழுதுங்கண்டாய்நின்றகாமருதூர்க்
கண்டங்களிக்குமகிழடியார்க்கவர்காதலன்பு
கண்டங்களிக்குங்கருணைதந்தென்றெனைக்காப்பதுவே.

(இ - ள்.) கண்டம் களிக்கும்படி நஞ்சு அமுது உண்ட காரண - கழுத்துச் செருக்குறும்படி விடத்தை அமிர்தமாக உண்டருளிய காரணரே,—இக் கு முழுதும் அகண்டங்கள் கண்டாய் - இப்பூமிமுழுதையும் (மற்றவைகள்) எல்லாவற் றையும் படைத்தவரே,—கா நின்ற மருதூர் - சோலைகள் நிலை பெற்ற மருதூரினிடத்தே—கண் தங்கு அளிக்கு மகிழ் அடி யார்க்கு - (உம்முடைய) கண்களிலே பொருந்திய கருணைக்கு மகிழாநின்ற தொண்டர்களுக்கு— அவர் காதல் அன்பு கண்டு- அவர்களுடைய விருப்பமாகிய அன்பைக் கண்டு—அங்கு அளிக்கும் கருணை தந்து எனைக் காப்பது என்று - அங்கே கொடுக்கின்ற திருவருளை (எனக்குந்) தந்து என்னைக் காப்பது எந்நாள்! எ-று. (கக)

காப்பரவப்பணியாக்கொள்வர்மாக்கமலாலயங்கொள்
காப்பரவப்பணினீக்கித்தேனைக்கவர்மருதூர்
காப்பரவப்பணியானிற்கும்வஞ்சகக்கன்னெஞ்சுரு
காப்பரவப்பணியென்னையுமாள்வர்கனற்கண்ணரே.

(இ - ள்.) காப்பு அரவம் பணியாக் கொள்வர் - கங்க ணம் சருப்பாபரணமாகக் கொள்ளுவர்,—மா கமலம் ஆலயம் கொள் காப்பு அரவம் பணினால் நீக்கித் தேனைக் கவர் மரு தூர் காப்பர் - வண்டுகள் தாமரைமலராகிய வீடு கொண்ட

(இதழாகிய) கதலை ஓசையையுடைய பண்ணினாலே நீக்கித் தேனைக் கவர்கின்ற மருதூரைக் காத்தருளுவர்,—அவம் பணியால் நிற்கும் வஞ்சகம் கல் நெஞ்சு உருகாப் பரவப் பணி - வீணாகிய தொழிலினாலே நிலைபெற்ற வஞ்சகத்தையுடைய கல்லைப்போலும் மனம் உருகித் துதிக்கும்வண்ணம் செய்து—என்னையும் ஆள்வர் - என்னையும் ஆண்டருளுவர்—கனல் கண்ணர் - அக்கினிக்கண்ணையுடையவராகிய சிவபெருமான். எ - று. (உ0)

கனகத்தமரவென்சென்னியின்வண்டின்கணங்கள்செங்கோ
கனகத்தமரும்புனன்மருதூரன்கரியகண்டன்
கனகத்தமருகக்கையானரக்கனைக்காதியதுங்
கனகத்தமரவிந்தப்பதம்வைப்பதெக்காலத்திலே.

(இ - ள்.) கனம் கத்து அமர - மிகுதியாகிய (சமயக்)கத்துக்கள் அடங்கும்வண்ணம்,—என் சென்னியின் - என்சிரசின்மீது,—வண்டின் கணங்கள் செம் கோகனகத்து அமரும் புனல் மருதூரன் - வண்டினுடைய கூட்டங்கள் செந்தாமரை மலரின்கண் இருக்கும் நீரையுடைய மருதூரையுடையவரும்—கரிய கண்டன் - கரிய கழுத்தையுடையவரும்—கனகம் தமருகம் கையான் - பொன்னிறத்தையுடைய உடுக்கையேந்திய கையையுடையவருமாகிய சிவபெருமான்—அரக்கனைக் காதிய துங்கம் நகத்து அம் அரவிந்தம் பதம் - இராக்கதனாகிய இராவணனை நெரித்த பெரிய நகத்தையுடைய அழகிய செந்தாமரைமலர்போலும் திருவடியை—வைப்பது எக்காலத்தில் - வைத்தருள்வது எக்காலத்தில். எ-று. சமயக்கத்துக்கள் அடங்கும் வண்ணம் திருவடியை என்சிரசின்மீது வைத்தருள்வது எக்காலத்திலெனக் கூட்டுக. (உக)

காலம்பரம்பையங்காசினியஞ்சிகலங்குமத்த
காலம்பரம்பையங்காய்ந்தென்னையாள்கைக்குக்கூட்கழுசீர்க்

காலம்பரம்பையங்காட்டிக்குப்பாயக்கருதிமள்ளர்
காலம்பரம்பையங்கூர்மருதூராமுக்கட்பரனே.

(இ - ள்.) கால் அம்பரம் பயம் காசினி அங்கி கலங்கும் அந்த காலம் - காற்றும் ஆகாயமும் நீரும் பூமியும் அக்கினியும் கலங்காநின்ற முடிவுகாலத்தின்கண்—பயம் காய்ந்து என்னை ஆளகைக்குப் பரம் - அச்சத்தை ஒழித்து என்னை ஆளுதற்பொருட்டு (உமக்கே) பாரம்,—கள் கழுநீர்க் கால அம்பு - தேனைப்பொருந்திய செங்கழுநீரையுடைய வாய்க்காலினுள்ள நீர்—அரம்பை அம் காட்டிக்குப் பாயக் கருதி - வாழைச்சோலைக்குப் பாய நினைந்து—மள்ளர் கால் அம் பரம்பை அங்கு ஊர் மருதூர - பள்ளர்கள் தங்கள் காலினாலே அழகிய பரம்புகளை அவ்வாய்க்காலிலே செலுத்துகின்ற மருதூரையுடையவரே,—முக்கண் பரனே - மூன்றுகண்களையுடைய மேலானவரே. எ-று. பரம்பு கழனி திருத்தும் பலகை. (உஉ)

பரமாகவந்தமறப்பூதஞ்சூழ்படையாயதள்ம்
பரமாகவந்தமதிச்சடையாய்வையம்பாவகனம்
பரமாகவந்தமருத்தாருவாய்வினைபற்றறநின்
பரமாகவந்தவெனைமருதூரகண்பார்த்தருளே.

(இ - ள்.) பரமா - மேலானவரே,—கவந்தம் மறம் பூதம் சூழ் படையாய் - குறைத்தலைப்பேய்களையும் வலியையுடைய பூதங்களையும் சூழ்ந்த சேனையாகவுடையவரே,—அதள் அம் பர - தோலாகிய வஸ்திரத்தையுடையவரே,—மாகம் அந்தம் மதிச் சடையாய் - ஆகாயத்தில் வருகின்ற அழகிய சந்திரனை முடித்த சடையையுடையவரே,—வையம் பாவகன் அம்பரம் மா கவந்தம் மருத்து ஆருவாய் - பூமியும் அக்கினியும் ஆகாயமும் பெரிய நீரும் வாயுவும் ஆகுமவரே,—வினை பற்று அற நின் பரம் ஆக வந்த எனை - (என்னுடைய) வினைகள் சார்தல்

ஒழியும்பொருட்டு உம்முடைய பாரமாக வந்த என்னை—மரு தூர கண் பார்த்தருள் - மருதூரையுடையவரே கண்பார்த் தருளும். எ-று. (உக)

அருளத்தனைநம்பிறப்பேழுநீக்குமடிக்கமல
மருளத்தனைநமக்கண்ணியனுக்குவனுட்பட்டதொண்
டருளத்தனைமருதூரனையன்பரவத்தையில்வந்
தருளத்தனைமனமேயொழியாமனம்மையனென்றே.

(இ - ள்.) அத்தனை நம் பிறப்பு எழும் நீக்கும் அடிக் கம லம் அருள - அவ்வளவினவாகிய நம்முடைய எழுவகைப்பி றப்பையும் போக்குகின்ற திருவடித்தாமரைமலரை (நமக்குத்) தரும்பொருட்டு—தனை நமக்கு அண்ணியன் ஆக்குவன் - தம்மை நமக்குச் சமீபித்தவராக்குவர்;—ஆட்பட்ட தொண் டர் உளத்தனை - அடிமைப்பட்ட அடியாருடைய இருதயத்து ள்ளவரும்—மருதூரனை - மருதூரையுடையவரும்—அன்பர் அவத்தையில் வந்து அருள் அத்தனை - பத்தர்களுடைய அவ த்தையின்கண் வந்து (அவர்களைக்) காக்கும் பிதாவுமாகிய சிவ பெருமானை—மனமே ஒழியாமல் நம் ஐயன் என்றே அருள் - நெஞ்சே இடையறாது நங்கடவுளென்றே (நீ) சொல்வாயாக. எ-று. சொல்வாயாயின், தம்மை நமக்குச் சமீபித்தவராக்குவர் எனக் கூட்டுக. [பூட்டுவிற்பொருள்கோள்.] (உ௨)

ஐயம்பலருந்தரச்சென்றிரந்தவனுதவனு
ரையம்பலரும்பொடிபடச்செற்றவரன்மருதூ
ரையம்பலருஞ்சடையானருளிலையேலங்க
னையம்பலருங்கனஞ்சேர்குழலிக்கரும்பகையே.

(இ - ள்.) ஐயம் பலரும் தரச் சென்று இரந்தவன் - பிச்சையைப் பலரும் இடப் போய் யாசித்தவரும்—ஆதவ னுரை அம் பல் அரும் பொடி படச் செற்ற அரன் - சூரியனை அழகிய பற்கள் அரிய துகள்படும்வண்ணம் கோபித்த அர

னென்னுந் திருநாமத்தையுடையவரும்—மருதூர் ஐ - மருதூரையுடைய கடவுளும்—அம்பு அலரும் சடையான் அருள் இலேயேல்-கங்கைநீர் விரிந்த சடையையுடையவருமாகிய சிவபெருமானுடைய கருணை இல்லையாயின்,—அநங்கன் ஐயம்பு அலரும் - மன்மதனுடைய ஐந்துபுஷ்பபாணங்களும்—கனம் சேர் குழலிக்கு அரும் பகை - மேகத்தைப்போலும் கூந்தலையுடைய தலைமகளுக்குப் பெரும்பகை. எ-று. [பாங்கிகூறல்.] ()

அரும்பரவைக்கடுக்கண்டர்வன்றொண்டரையாள்கையிலே
யரும்பரவைக்குறவாக்குந்திருவருளார்மருதூ
ரரும்பரவைக்கண்டரையரைவைப்பவரன்றுநஞ்ச
மரும்பரவைக்கஞ்சன்வஞ்சமென்றட்டவற்கப்புறமே.
௬

(இ - ள்.) அரும் பரவைக் கடுக் கண்டர்-பெருமையாகிய கடலினெழுந்த நஞ்சையடக்கிய கழுத்தையுடையவரும்—வன்றொண்டரை ஆள்கையில் அயரும் பரவைக்கு உறவு ஆக்கும் திரு அருளார் - சுந்தரமூர்த்திநாயனாரை அடிமைக்கொண்டமையால் (அவரை ஊடலினாலே) தளராநின்ற பரவையாரோடும் உறவுசெய்தருளிய திருவருளையுடையவரும்—மருதூரர் - மருதூரையுடையவருமாகிய சிவபெருமான்—அண்டரை அரை - (தம்மைச்)சார்ந்த பூவுலகத்தாரை—உம்பர் அவைக்கு வைப்பவர் அன்று - தேவர்களுடைய கூட்டத்தின்கண் வைப்பவரல்லர்,—நஞ்சம் அரும்பு அரவைக் கஞ்சன் வஞ்சம் என்று அட்டவற்கு அப்புறம் - விடந்தோன்றுகின்ற பாம்பைக் கஞ்சனுடைய வஞ்சகமென்று கொன்றவராகிய விட்டுணுவினுடைய பதத்துக்கு மேலாகிய பதத்தின்கண் (வைப்பவர்.) எ-று. (உசு)

அப்புக்கரக்குஞ்சடைமருதூரரொன்னாரைமண்மே
லப்புக்கரக்குமணியணிவோர்வெற்பின்னணவெய்த

வப்புக்கரக்குஞ்சரங்கண்டிவ்வாறிங்கதரத்தினை
யப்புக்கரக்குங்கறுக்குங்கொடிநின்றதாவிகொண்டே.

(இ - ள்.) அப்புக் கரக்கும் சடை மருதூரர் - கங்கை நீரை அடக்கிய சடையையுடைய மருதூரினரும்—ஒன்றாரை மண்மேல் அப்பு உக்கர் - பகைவர்களாகிய அசுரர்களைப் பூமியின்மேலே மோதிய அக்கினியையுடையவரும்—அக்கு மணி அணிவோர் வெற்பின் - எலும்புமணியைத் தரிப்பவருமாகிய சிவபெருமானுடைய மலையின்கண்ணே—அண்ணல் எய்த அப்புக் கரம் குஞ்சரம் கண்டு - தலைமகன் விடுத்த அம்பைப் புழைக்கையையுடைய யானையினிடத்தே கண்டு—அதரத்தின் நயப்புக்கு அரக்கும் கறுக்கும் கொடி - அதரத்தினது அழகுக்கு அரக்கும் கறுக்கின்ற கொடிபோலுந் தலைமகள்—இவ்வாறு இங்கு ஆவி கொண்டு நின்றது - இங்ஙனம் இங்கே பிராணனைக்கொண்டு நின்றனள். எ-று. உக்கர் என்பதற்கு இடபத்தையுடையவரெனப் பொருள்கூறினு மமையும். உக்கம் - அக்கினி, இடபம். மூன்றாமடியில் அம்பு அப்பு என வலித்தல்விகாரம் பெற்று நின்றது. [பின் சென்ற செவிலி இரங்கல்.] (உஎ)

ஆவிக்கனங்களங்கார்வண்டணிதந்தமர்மருதூ
ராவிக்கனங்களந்தொண்டர்க்கடாமைச்சென்றாண்டருளை
யாவிக்கனங்களங்காட்டமெய்வோர்க்குமவத்தையில்வந்
தாவிக்கனங்களருத்துமுன்னாண்டருளஞ்சலென்றே.

(இ - ள்.) ஆவிக்கு அனம் கள் அங்கு ஆர் வண்டு அணி தந்து அமர் மருதூரா - வாவிகளுக்கு அன்னங்களும் தேனை அங்கே உண்ணும் வண்டுகளும் அழகு செய்து கொண்டு இருக்கின்ற மருதூரையுடையவரே,—விக்கனங்கள் அம் தொண்டர்க்கு அடாமைச் சென்று ஆண்டருள் ஐயா - இடையூறுகள் அழகிய அடியார்களுக்கு அணுகாவண்ணம்போய் அண்டாத

ஞு - ழுயரே,—விக்கல் நம் களம் காட்ட - விக்கலை நம்மு டைய கழுத்துத் தோற்றுவிக்க—மெய் வேர்க்கும் அவத்தையில் - சரீரம் வேர்க்கின்ற அவத்தையின்கண்—ஆவிக்கு அனைங்கள் அருத்துமுன் - பிராணனுக்குச் சோறுகளை ஊட்டுமுன்—வந்து அஞ்சல் என்று ஆண்டருள் - எழுந்தருளிவந்து அஞ்சாதொழியென்று ஆண்டருளும். எ - று. (உஎ)

அஞ்சக்கரத்தைநினைவோர்க்குநாச்செவியங்கமென்றுண்
டஞ்சக்கரத்தையணைவேற்கண்ணார்வசமாகவொட்டா
ரஞ்சக்கரத்தையரிக்களித்தார்மருதூராரங்கி
யஞ்சக்கரத்தையறுத்தாரென்பார்க்கில்லையச்சங்களே.

(இ - ள்.) அஞ்சு அக்கரத்தை நினைவோர்க்கு - பஞ்சாக்ஷரத்தைச் சிந்திப்பவர்களுக்கு—நாச் செவி அங்கம் மெல் துண்டம் சக்கு - நாக்கும் காதும் காயமும் மென்மையாகிய மூக்கும் கண்ணும்—அரத்தை அணை வேல் கண்ணார் வசம் ஆக ஒட்டார் - அரத்தைப் புணர்ந்த வேல்போலும் கண்களையுடைய பெண்களது வயத்தனவாக விடாதவர்—அம் சக்கரத்தை அரிக்கு அளித்தார் - அழகிய சக்கராயுதத்தை விட்டுணுவுக்குக் கொடுத்தவர்—மருதூரார் - மருதூரையுடையவர்—அங்கி அஞ்சக் கரத்தை அறுத்தார் என்பார்க்கு - அக்கினி அஞ்சும்வண்ணம் கையைச் சேதித்தவர் என்று துதிப்பவர்களுக்கு—அச்சங்கள் இல்லை - பயங்கள் இல்லை. எ-று. (உஅ)

அச்சங்கரிக்குறயான்றுயர்நீங்கவெநாரணனெய்த
வச்சங்கரிக்குமரிதுகண்டீர்மதனங்கமெரி
யச்சங்கரிக்குமரனுழவோர்பறிவான்மூத்தமீ
னச்சங்கரிக்கும்வயன்மருதூரனைவணக்கவே.

(இ - ள்.) கரிக்கு அச்சம் உற - யானைக்குப் பயம் பொருந்தவும்—யான் துயர் நீங்க - நான் துன்பத்தினின்றும் நீங்கவும்—நாரணனை [illegible] எய்த

அச்சு—அங்கு அரிக்கும் அரிது கண்டீர் - அங்கே விட்டுணு வுக்கும் அரியது கண்டீர்;—மதன் அங்கம் எரியச் சங்கரிக்கும் அரன் - மன்மதனுடைய சரீரம் எரியும்வண்ணம் கொன்றரு ளிய அரனென்னும் திருநாமத்தையுடையவரும்—உழவோர் பறியால் முத்தம் மீன் அச்சங்கு அரிக்கும் வயல் மருதூரன் - உழவர்கள் பறியினாலே முத்துக்களையும் மீன்களையும் அந்தச் சங்குகளையும் அரிக்கின்ற வயல்களினாலே சூழப்பட்ட மருதூ ரையுடையவருமாகிய சிவபெருமானுடைய—அணி வரை க்கு - அழகிய மலையின்கண்ணே. எ - று. [மணம் விலக்கு.] ()

வரையரம்பாய்கதிர்வைவேன்முருகர்வழுவைமுக
வரையரம்பாசிலைக்கஞ்சப்புனன்மருதூரர்வெள்ளி
வரையரம்பாய்சடையாரிசையேழும்வரவமைத்த
வரையரம்பாய்வரக்கண்டோர்மலரடிவந்திப்பனே.

(இ-ள்.) வரை அரம் பாய் கதிர் வை வேல் முருகர்-வரை யப்பட்ட அரத்தினால் அராவப்பட்ட ஒளியையுடைய கூர் மையாகிய வேலாயுதத்தையுடைய முருகக்கடவுளுக்கும்— வழுவை முகவர் ஐயர் - யானையினது முகத்தையுடையவ ராகிய விநாயகக்கடவுளுக்கும் பிதாவும்—அம் பசு இலைக் கஞ்சம் புனல் மருதூரர் - அழகிய பசிய இலைகளையுடைய தாமரையையுடைய நீரினாலே சூழப்பட்ட மருதூரையுடைய வரும்—வெள்ளி வரையர் - வெள்ளிமலையையுடையவரும்— அம் பாய் சடையார் - கங்கைநீர் பாய்கின்ற சடையையுடை யவரும்—இசை ஏழும் வர அமைத்த வரையர் அம்பு ஆய்வரக் கண்டோர் - ஏழிசைகளையும் வரும்படி அமைத்த வேய்ங்குழ லையுடையவராகிய விட்டுணு பாணமாய் வரச்செய்தவருமா கிய சிவபெருமானுடைய—மலர் அடி வந்திப்பன் - செந்தா மரைமலர்போலும் திருவடிகளை (யான்) வழிபடுவேன். எ-று.

வந்தியங்காமலைகுட்டங்களைபித்தம்வாதகம்மேல்
வந்தியங்காமலையன்னநாதனைவான்றனிச்செவ்

வந்தியங்காமலைமாமருதூரனைவாழ்த்திநெஞ்சே
வந்தியங்காமலைசூடும்பிரானைவரதனையே.

(இ - ள்.) அம் வந்தி காமலை சூட்டங்கள் ஐ பித்தம் வாதம் நம்மேல வந்து இயங்காமல் - நீரிழிவும் காமாலையும் வெண்குட்டம் கருங்குட்டங்களும் சிலேட்டுமமும் பித்தமும் வாதமும் நம்மேல் வந்து தங்காவண்ணம்,—ஐயானனம் நாதனை - ஐந்துமுகங்களையுடைய தலைவரும்—வான் தலைச் செவ்வந்தி அம் கா மலை மா மருதூரனை - ஆகாயத்தைச் செவ் வந்தியையுடைய அழகிய சோலைகள் பொருகின்ற பெரிய மருதூரையுடையவரும்—அங்கு அலை ஆம் சூடும் பிரானை - அங்கே திரையையுடைய கங்கைநீரைத் தரித்த கடவுளும்— வரதனை - வரத்தைக்கொடுப்பவருமாகிய சிவபெருமானை— நெஞ்சே வாழ்த்தி வந்தி - மனமே துதித்து வழிபடுவா யாக. எ-று. (௩உ)

வரம்பலவாயன்பர்க்கீவாய்ககனம்வருங்கதிர
வரம்பலவாய்விட்டகலச்செற்றாய்தவர்மாதர்கற்பின்
வரம்பலவாய்விடவேடங்கொண்டாய்மருதூரபொன்னி
வரம்பலவாயமதண்டத்தென்மேலன்புவைத்தருளே.

(இ - ள்.) பல வரம் ஆய் அன்பர்க்கு ஈவாய் - பலவரங் களை (உம்மை) ஆராய்ந்தறியும் பத்தர்களுக்குக் கொடுப்ப வரே,—ககனம் வரும் கதிரவர் அம் பல் அ வாய் விட்டு அக லச் செற்றாய் - ஆகாயத்தின்கண் வருகின்ற ஆதித்தருடைய அழகிய பற்கள் அவ்வாயை விட்டு நீங்கும்வண்ணம் உதிர்த்த வரே,—தவர் மாதர் கற்பின் வரம்பு அல ஆய் விட வேடம் கொண்டாய் - முனிவர்களுடைய பன்னியர்களது கற்பினது எல்லை அல்லனவாய்விடும்வண்ணம் (பிக்ஷாடன) வேடங் கொண்டவரே,—மருதூர - மருதூரையுடையவரே,—நிவர் பொன்னம்பலவா - உயர்ந்த கனகசபையையுடையவரே,—

யமன் தண்டத்து என்மேல் அன்பு வைத்தருள் - இயமனு டைய தண்டத்தின்கண் என்மேல் அன்புவைத்தருளும் எ-று

வையம்பரவமருதூருறையும்வரதர்செந்தீ
வையம்பரவமதித்தார்க்கரியவர்வாய்த்தவது
வையம்பரவமகட்சூட்டுவார்கழல்வாழ்த்தியன்பு
வையம்பரவமுடியார்நெஞ்சேநல்வரந்தரவே.

(இ - ள்) வையம் பரவ மருதூர் உறையும் வரதர் - பூமி யின்கணுள்ளார் துதிக்கும்படி மருதூரின்கண் எழுந்தருளி யிருக்கும் வரத்தைக் கொடுப்பவரும்—செம் தீ வை அம்பர் - சிவந்த அக்கினியாகிய கூர்மையையுடைய பாணத்தையுடை யவரும்—அவமதித்தார்க்கு அரியவர் - (தம்மை) அவமதித்த வர்களுக்கு அரியவரும்—வாய்த்த வதுவை அம் பரவ மகள் சூட்டுவார் கழல் - பொருந்திய மணமாலையை அழகிய வலை ஞர்மகளுக்குச் சூட்டினவருமாகிய சிவபெருமானுடைய திரு வடிகளை—வாழ்த்தி அன்பு வை - துதித்து அன்பை வைப்பா யாக,—அம்பு அரவம் முடியார் - (கங்கை) நீரையும் பாம்பை யுமணிந்த முடியையுடையவராகிய அக்கடவுள்—நெஞ்சே நல் வரம தர - மனமே நன்மையாகிய வரத்தைத் தரும்பொ ருட்டு. எ-று. (௫௪)

தரவாகமஞ்சனமெய்க்கூற்றென்மேல்வருந்தண்டத்தினு
தரவாகமங்கைபங்கோடுவிளங்கத்தலங்கணா
தரவாகமங்கனின்றேத்துஞ்செந்தாமரைத்தாளெனக்குத்
தரவாகமத்தொலையாமருதூருறைசங்கரனே.

(இ - ள்.) தாம் ஆகம் மஞ்சு அன்ன மெய்க் கூற்று என் மேல் வரும் தண்டத்தின் - மலையைப் போன்ற மார்பையும் மேகத்தைப் போன்ற சரீரத்தையுமுடைய இயமன் என்மேல் வந்து செய்யும் தண்டத்தின்கண்—ஆதரவு ஆக மங்கை பங் கோடு விளங்க - விருப்பம் பொருந்த உமாதேவியார் ஒருபா

கத்தின்கண் விளங்கும்வண்ணம்—தலம் கணநாதர் அவ் ஆகமங்கள் நின்று ஏத்தும் செந்தாமரைத் தாள் எனக்குத் தரவா - பூவுலகத்தாரும் கணநாதர்களும் அச்சிவாகமங்களும் நின்று துதிக்கின்ற செந்தாமரைமலர்போலுந் திருவடிகளை எனக்குத் தரும்பொருட்டு வந்தருளும்,—கமம் தொலையா மருதூர் உறை சங்கரனே - (பொருள்களினது) நிறைவு நீங்காத மருதூரின்கண் எழுந்தருளியிருக்கின்ற சுகஞ்செய்பவரே. எ-று. (௩௫)

சங்கரவீரமதியாபரணதமிழ்மருதூர்ச்
சங்கரவீரமழுவேந்துநாதசரணெனக்கஞ்
சங்காவீரமிட்டேத்தன்பர்போற்றுன்பந்தானறவச்
சங்கரவீரமுன்வந்துநிற்பாய்கொன்றைத்தாரவனே.

(இ - ள்.) சங்கு அரவு ஈரம் மதி ஆபரண - சங்கும் பாம்பும் குளிர்ச்சியையுடைய சந்திரனுமாகிய ஆபரணங்களையுடையவரே,—தமிழ் மருதூர்ச் சங்கர - தமிழையுடைய மருதூரின்கண் எழுந்தருளியிராநின்ற சுகஞ்செய்பவரே,—வீரம் மழு ஏந்து நாத - வீரத்தையுடைய மழுப்படையைத் தாங்கிய தலைவரே,—சரண் எனக் கஞ்சம் கரவீரம் இட்டு ஏத்து அன்பர்போல் - புகலிடமென்று தாமரைமலரையும் அலரிமலரையும் இட்டுத் துதிக்கின்ற பத்தர்களுக்குப்போல—துன்பம் அற அச்சம் சுரவு ஈர - துன்பம் நீங்கும்வண்ணம் பயத்தையும் வஞ்சகத்தையும் அரியும்பொருட்டு—முன் வந்து நிற்பாய் - எனக்குமுன் எழுந்தருளிவந்து நின்றருளும்,—கொன்றைத் தாரவனே - கொன்றைமாலையையுடையவரே. எ-று. (௩௬)

அவனித்தலத்தன்பர் துன்பத் துடைப்பவனம்புயன்மா
லவனித்தலத்தனென்றேத்தும்பிரானைத்தனித்தவெண்டே
யவனித்தலத்தன்வயன்மருதூரனையார்விழிக்கேற் [யதே.
பவனித்தலத்தன்னடைந்தாள்செல்லன்மீட்டென்னையாற்றி

(இ - ள்.) அவனித் தலத்து அன்பர் துன்பம் துடைப் பவன் - பூமியின்கண்ணே பத்தர்களுடைய துன்பத்தை ஒழிப்பவராயும்—அம்புயன் மாலவன் நித்தல் அத்தன் என்று ஏத்தும் பிரான் - பிரமனும் விட்டுணுவும் நித்தமும் பிதாவென்று துதிக்கின்ற. கடவுளாயுமுள்ள சிவபெருமானுடைய—நத்து அளித்த வெள் தூய வல் நித்தலம் தண் வயல் - சங்குகள் தந்த வெள்ளிய சுத்தமாகிய வலிய முத்துக்களையுடைய குளிர்மையாகிய வயல்களினாலே சூழப்பட்ட—மருதூர் அனையார் - மருதூரைப் போல்வாராகிய இம்மங்கையருடைய—விழிக்கு ஏற்ப வணித்தல் அத்தண்டைத் தாள் செல்லல் மீட்டு என்னை ஆற்றியது - கண்ணுக்கு இயையப் புகழ்தலைப்பொருந்திய அந்தத் தண்டையையணிந்த கால் (பூமியிலே தோய்தலால்) என்வருத்தத்தை மாற்றி என்னை ஆற்றியது. எ-று. [தெளிதல்.] (கஎ)

ஆற்றலைத்தண்டரும்போரிலைமாலுக்கரியவனே
யாற்றலைத்தண்டருநீர்முடியாய்மருதூரரசே [கோ
யாற்றலைத்தண்டருங்கூற்றுள்கொண்டேகிடுமென்றெனக்
காற்றலைத்தண்டருங்காணத்தந்தாண்டருளஞ்சலென்றே.

(இ - ள்.) ஆல் தலைத் தண்டு அரும்பு ஓரிலை மாலுக்கு அரியவனே - ஆலமரத்தினது தலைக்கொம்பில் அரும்பிய ஓரிலையின்கண்ணே நித்திரைசெய்கின்ற விட்டுணுவுக்கு அரியவரே,—ஆறு அலை தண் தரும் நீர் முடியாய் - நதியினது திரையினாலே குளிர்மையைத் தருகின்ற நீர்மையைப்பொருந்திய முடியையுடையவரே,—மருதூர் அரசே - மருதூருக்கு நாயகரே,—ஆறு அலைத்து அண்ட அரும் கூற்று ஆள் கொண்டு ஏகிடும் அன்று - வழியின்கண் வருத்திக் கிட்டுதற்கரிய இயமனுடைய தூதர்கள் என்னைக் கொண்டுசெல்லும் அந்நாளிலே—எனக்கு ஓ ஆற்றலைத் தண்டரும் காணத்

நந்து அஞ்சல் என்று ஆண்டருள் - எனக்கு ஒருவலிமையை
தனடஞ்செய்வோரும் காணுமபடி தந்து அஞ்சாதொழியெ
ன்று ஆண்டருளும். எ-று. (௩அ

அஞ்சுகமாகமஞ்சொன்மருதூரராக்கலேயி
ரஞ்சுகமாகமங்கச்செற்றுனேயுமடர்த்தபங்க
யஞ்சுகமாகமனத்துள்வைப்பேனேயடர்கைக்குச்சற்
றஞ்சுகமாகமழைமுகில்போனிறத்தந்தகனே.

(இ - ள்.) அம் சுகம் ஆகமம் சொல் மருதூரர் - அழகி
கிளிகள் சிவாகமங்களைச் சொல்லாநின்ற மருதூரின்கண் எழு
தருளியிருக்கும் சிவபெருமானுடைய—அரக்கனை ஈரஞ்சு க
ஆகம் மங்கச் செற்று - இராக்கதனுகிய இராவணனைப் பத்
கிய தலைகளும் மார்பும் கெரியும்படி ஊன்றி—உனையும் அட
ர்த்த பங்கயம் - உன்னையும் உதைத்தருளிய திருவடித்தாமரை
மலரை—சுகம் ஆக மனத்துள் வைப்பேனை - இன்பம் உண்
கும்வண்ணம் என்னெஞ்சத்துள் இருத்தித் தியானிக்குமெ
ன்னை—அடர்கைக்குச் சற்று அஞ்சுக - நெருங்குதற்குச் சிறி
அஞ்சக்கடவாய்,—மாகம் மழை முகில்போல் நிறத்து அந்
கனே - ஆகாயத்தின்கண்ணதாகிய மழையைப்பொழியும்
மேகத்தைப்போலும் நிறத்தையுடைய இயமனே. எ-று. சி
பெருமானுடைய திருவடித்தாமரை மலரை எனக் கூட்டுக. (

அந்தத்தலைவரையாக்கையர்தென்மருதூரரன்பர்க்
கந்தத்தலைவரைமாத்திரைசிற்செறுநர்வெற்பி
[illegible]
[illegible]

(இ - ள்.) [illegible]
[illegible]

அத்தர் வெற்பின் - பத்தர்களுக்கு முடிவுகாலத்திலுள்ள தன் பத்தை அரைமாத்திரையினுள்ளே போக்குகின்ற பிதாவுமாகிய சிவபெருமானுடைய மலையின்கண்ணே—அம் தந்து அலைவரைபோல் கரி கொல்லுமுன் - மதநீர் பாய்கின்ற நடைமலைபோலும் யானை (நம்மைக்) கொல்லுமுன்—அஞ்சல் என்ற அந்தத்தலைவரை அன்றி - பயப்படாதேயென்று சொல்லிய அந்நாயகருக்கல்லது—அணி முரசு ஆர்ப்பது என் - அழகையுடைய முரசம் ஆரவாரிப்பது என்னை. எ-று. [மணம் விலக்கு] (௩௦)

அணியவனந்திமருதூரனென்றிறைஞ்சன்பர்க்குப்பாம்
பணியவனந்திவணங்கொண்டமேனியனானந்தனு
ரணியவனந்திகழீமத்தனாடியருள்புரிந்தா
ரணியவனந்திவாரத்தன்பதத்திலமர்ந்தவனே.

(இ - ள்.) நந்தி மருதூரன் என்று - நந்தியென்னுந் திருநாமத்தையுடையவர் மருதூரின்கணெழுந்தருளியிருப்பவர் என்று சொல்லி—இறைஞ்சு அன்பர்க்கு அணியவன் - வணங்குகின்ற பத்தர்களுக்குச் சமீபித்தவர்,—பாம்பு அணியவன் - சருப்பமாகிய ஆபரணத்தை யுடையவரும்—அந்தி வணம் கொண்ட மேனியன் - செவ்வானம்போலும் நிறத்தைப்பெற்ற திருமேனியையுடையவரும்—ஆனந்தன் - சுகரூபியும்—நாரணியவன் - உமாதேவியையுடையவரும்—நந்து இகழ் ஈமத்தன் ஆடி - கெடாநின்ற இகழப்படும் சுடுகாட்டின்கண் நிருத்தஞ்செய்பவரும்—அருள் புரிந்து ஆர் அணியவன் - கருணையை (அடியார்களுக்குச்) செய்து திருவாதிரைநாளையை அணிந்தலையுடையவரும்—நந்தி வாரத்தன் - இடபத்தின்மேல் வருதலையுடையவரும்—பதத்தில் அமர்ந்தவன் - (அடியார்களது) பக்குவத்திற் பொருந்தினவருமாகிய சிவபெருமான். எ - று.

அம்பரவம்புனைவேணியபாணியினங்கியவை
யம்பரவம்புனைசூழ்மருதூருறையையதிசை
யம்பரவம்புனைநெற்றிக்கனல்விழியாயென்பதை
யம்பரவம்புநைகொங்கையைவீழ்ப்பதறிந்திலையே.

(இ - ள்.) அம்பு அரவம் புனை வேணிய - (கங்கை)நீரை யும் பாம்பையும் அணிந்த சடையையுடையவரே,—பாணி யின் அங்கிய - கையிலே தரிக்கப்பட்ட அக்கினியையுடைய வரே,—வையம் பரவு அம் புனை சூழ் மருதூர் உறை ஐய - பூமியிலுள்ளோர் துதிக்கின்ற அழகிய புன்னைமரங்கள் சூழ் ந்த மருதூரின்கண் எழுந்தருளியிராநின்ற பிதாவே,—திசை அம்பர - திக்காகிய வஸ்திரத்தையுடையவரே,—உனை நெற் றிக் கனல் விழியாய் என்பது வம்பு - உம்மை நெற்றியின் கண் அக்கினிக்கண்ணையுடையீரென்று சொல்வது வம்பு,— ஐயம்பர் அ வம்பு நை கொங்கையை வீழ்ப்பது அறிந்திலை - ஐந்துபாணங்களையுடையவனாகிய மன்மதன் அந்தக் கச்சை வருத்துகின்ற தனத்தையுடையவளைக் கொல்வதை அறிந்தி லீர் (ஆதலால்.) எ-று. [பாங்கி கூற்று.] (சஉ)

இலையயிலங்கையர்தந்தையர்தென்மருதூரரென்க
யிலையையிலங்கையர்வீழவுதைத்தவரென்றஞ்சம்லே
றிலையயிலங்கையராவென்றுபாலொழுக்கெல்லமெய்யா
மிலையயிலங்கையராவுயிர்நீங்குமென்னெஞ்சமே.

(இ - ள்.) இலை அயில் அம் கையர் தந்தையர் - இலைத் தொழிலையுடைய வேற்படையை ஏந்திய அழகிய கையினையு டையவராகிய முருகக்கடவுளுக்குப் பிதா—தென் மருதூரர்- அழகிய மருதூரையுடையவர்—என் கயிலை ஐ - மதிக்கப்படும் திருக்கைலாசமலையின்கண் எழுந்தருளியிராநின்ற கடவுள்— இலங்கையர் வீழ உதைத்தவர் என் - இலங்கையையுடைய வனாகிய இராவணன் விழும்வண்ணம் உதைத்தனவர் என்று

சொல்வாயாக,—நஞ்சம் வேறு இலை - (நமக்குத்) துணைவே றில்லை;—ஐ இலங்கு ஐயர் ஆ என்று பால் ஒழுக்கு எலலை - அழகு விளங்குகின்ற மூத்தோர்கள் ஆவென்று பாலைவார்க கின்ற முடிவின்கண்—மெய் ஆம் இலை ஐயில் அங்கு அயரா உயிர் நீங்குமுன்—சரீரமாகிய வீட்டைச் சிலேட்டும மேலிடு ம்பொழுது அங்கே மறந்து ஆன்மா நீங்குமுன்—என் நெஞ் சமே - என் மனமே. எ-று. என்மனமே ஆன்மா நீங்குமுன் பிதா மருதூரையுடையவர் கடவுள் ஊன்றினவர் என்று சொல்வாயாகவெனக் கூட்டுக. (௪௩)

என்றலைக்குன் றிருத்தாடாவென்பாருய்கைக்கென் கயிலை
யென்றலைக்குன் றினிருந்தருள்செய்யுமிறைமருதூ
ரென்றலைக்குன் றிநிறங்கவர்மேனிகொண்டீடழிக்கைக்
கென்றலைக்குன் றிவிடாதகல்வானத்தெழுவதுவே.

(இ - ள்.) என் தலைக்கு உன் திருத்தாள் தா என்பார் உய்கைக்கு - என்னுடைய தலைக்கு உம்முடைய திருவடிக ளைத் தந்தருளுமென்று சொல்வோர்கள் உய்தற்பொருட்டு— எண் கயிலை என்தலைக் குன்றின் இருந்து அருள் செய்யும் இறை மருதூர் - மதிக்கப்படுகின்ற கைலாசமெனப்படும் முத ன்மையாகிய மலையின்கண் எழுந்தருளியிருந்து கருணையைச் செய்யாநின்ற சிவபெருமானுடைய மருதூரின்கண்ணே— என்று அலைக் குன்றி நிறம் கவர் மேனி கொண்டு ஈடு அழிக் கைக்கு - சூரியன் இராத்திரியைக் குன்றிமணியினது நிறத் தைக் கவர்கின்ற சரீரத்தைக்கொண்டு வலியழித்தற்கு— என்று அலைக் குன்றிவிடாது அகல் வானத்து எழுவது - எப் பொழுது கடலினுள்ளே ஈசித்துவிடாது பரந்த ஆகாயத்தி ன்கண் எழும்புவது. எ-று. [இரவினிட்டம்.] (௪௪)

எழுதாரணிபுகழ்மாமருதூருறையீசர்வெற்பி
லெழுதாரணிதிகழ்தோளண்ணலேயிந்தமுத்தமன்ற

லெழுதாரணிகுழலாட் கெங்ஙனுந்தொய்யி லேந்துகொங்
கெழுதாரணியமடவாரிடையினிறுதிகண்டே.. [கைக்

(இ - ள்.) எழு தாரணி புகழ் மா மருதூர் உறை ஈசர் வெற்பில் - எழுலகமும் புகழ்கின்ற பெரிய மருதூரின்கண் எழுந்தருளியிராநின்ற சிவபெருமானுடைய மலையின்கண்ணே—எழு தாரணி திகழ் தோள் அண்ணலே - எழுவையும் மலையையும்போல விளங்குகின்ற புயங்களையுடைய தலைமகனே,—இந்த முத்தம் மன்றல் எழு, தார் அணி குழலாட்கு எங்ஙன் ஆம் - (நீ கையுறையாகக் கொண்டுவந்த) இந்த முத்துமாலை மணமெழுகின்ற மாலையை யணிந்த கூந்தலையுடைய தலைமகளுக்கு எப்படி ஆகும்!—அணிய மடவார் - அடுத்த பெண்கள்—இடையின் இறுதி கண்டு - இடையினது இறந்துபடுதலைக் கண்டு—ஏந்து கொங்கைக்குத் தொய்யில் எழுதார் - கனத்த தனங்களுக்குத் தொய்யிலை எழுதார்கள் (ஆதலால்.) எ-று. [பாங்கி கையுறை மறுத்தல்.] (௬௫)

கண்டனையாரழலாக்கொண்டதேவைக்கரியதிருக்
கண்டனையாரவயன்மருதூர்தனிற்கண்களிக்கக்
கண்டனையார்வயிற்றிற்கருத்தாழ்வுங்கடந்துசொற்றேன்
கண்டனையாரயிற்கண்ணும்வலையுங்கடந்தனமே.

(இ - ள்.) கண் தனை ஆர் அழல் ஆக் கொண்ட தேவை - கண்ணை நிறைந்த அக்கினியாகக் கொண்டருளிய தேவரும்—கரிய திருக் கண்டனை - கரிய அழகிய கழுத்தையுடையவருமாகிய சிவபெருமானை—ஆரம் வயல் மருதூர்தனில் கண் களிக்கக் கண்டு - முத்துக்களையுடைய வயல்களினாலே சூழப்பட்ட மருதூரினிடத்தே கண்கள் களிக்கும்வண்ணம் தரிசித்து—அனையார் வயிற்றின் கருத் தாழ்வும் கடந்து - தாயர்களுடைய வயிற்றினுள்ள கருவின்கண்ணே தங்குதலையும் நீங்கி—சொல் தேன் கண்டு அனையார் அயில் கண் ஆம்

வலையும் கடந்தனம் - (தஞ்) சொற்கள் தேனையும் கற்கண்டையும் போலாகப்பெற்ற பெண்களுடைய வேல போலும் கண்ணாகிய வலையையும் கடந்தேம். - எ-று. (௬௬)

கடனந்திநம்பவந்தீர்கைக்குவைகைக்கவரின்வந்து
கடனந்தினம்படிவார்மருதூரன்கடுவுண்டவி
கடனந்திநம்பன்கடுங்காலகாலன்கங்காளன்கன்ம
கடனந்தினந்தொறும்புல்லும்பிரானங்கருத்தினனே.

(இ - ள்.) கடன் நந்தி நம் பவம் தீர்கைக்கு - (முற்பிறப்புக்களிலுள்ள வினைக்) கடன் கெட்டு நம்முடைய பிறப்பு ஒழிதற்பொருட்டு—வைகைக் கவரின் வந்து கடல் நந்து இனம் படி வார் மருதூரன் - வைகையாற்றினது பகுதியாகிய கால்கடோறும் வந்து கடலிலுள்ள சங்குகளினது கூட்டங்கள் படிகின்ற சலத்தையுடைய மருதூரின்கண் எழுந்தருளியிருப்பவரும்—கடு உண்ட விகடன் - நஞ்சையுண்ட அஞ்சற்பாலரும்—நந்தி நம்பன் - நந்தி நம்பன் என்னுந் திருநாமங்களையுடையவரும்—கடும் காலகாலன் - கடுமையாகிய காலகாலரும்—கங்காளன் - முழுவெலும்பையணிந்தவரும்—கல்மகள் தனம் தினந்தொறும் புல்லும் பிரான் - (இமைய) மலையினது புதல்வியாராகிய உமாதேவியாருடைய தனங்களை நாடோறுந்தழுவுகின்ற கடவுளுமாகிய சிவபெருமான்—நம் கருத்தினன் - நங்கருத்திலுள்ளார். எ-று. (௬௭)

கருமங்குலத்திறந்தற்சங்கைவிட்டுக்கசிந்துபவக்
கருமங்குலத்துமெய்யன்பர்க்குவீடுகமலக்கனி
கருமங்குலத்திருக்கைமங்கைபங்கன்கழுகுசென்று
கருமங்குலத்தணையும்மருதூரன்கழலிணையே.

(இ - ள்.) கருமம் குலத்திறம் தற்சங்கை விட்டுக் கசிந்து - வினையையும் குலமேன்மையையும் தற்போதத்தையும் ஒழித்து (மன) நெகிழ்ந்து—பவம் கரு மங்க உலத்து மெய் அன்

பர்க்கு வீடு - பிறப்புக்கு மூலமாகிய கரு நசிக்கும் வண்ணம் கெடுக்கின்ற மெய்ப்பத்தர்களுக்கு முத்தியாவது,—கமலங்கள் நிகரும் அங்குலம் திருக் கை மங்கை பங்கன் - செந்தாமரை மலர்களைப்போலும் விரல்களையுடைய அழகிய கைகளையுடைய உமாதேவியாரைப் பாகத்திலுடையவரும்—கமுகு சென்று கரு மங்குலத்து அணையும் மருதூரன் - கமுகமரங்கள் போய்க் கருமையாகிய மேகங்களை அளாவாநின்ற மருதூரையுடையவருமாகிய சிவபெருமானுடைய—கழல் இணையே - இரண்டு திருவடியுமே. எ-று. இரண்டாமடியில் மங்க என் பதன் ஈற்றகரம் விகாரத்தாற்றொக்கது. நான்காமடியில் அத்து-சாரியை. மெய்ப்பத்தர்களுக்கு முத்தியாவது சிவபெருமானுடைய இரண்டு திருவடியுமேயெனக் கூட்டுக. (சஅ)

கழலாதவஞ்செய்துபோற்றிடுகைக்கென்கருத்தைவிட்டுக்
கழலாதவன்புதருவாய்விடுதளக்கன்னியர்கைக்
கழலாதவன்பதந்தோய்மருதூரகருணைநின்பு
கழலாதவன்சொற்கதற்றும்பிதற்றுடைக்கள்வனுக்கே.

(இ - ள்.) கழலா - வீரக்கழலையணிந்தவரே,—தவம் செய்து போற்றிடுகைக்கு - தவத்தைச் செய்து (உம்மைத்) துதித்தற்கு—என் கருத்தை விட்டுக் கழலாத அன்பு தருவாய் - என்னெஞ்சத்தை விட்டு நீங்காத அன்பைத் தந்தருளும்,—தளம் கன்னியர் கை விடு கழல் ஆதவன் பதம் தோய் மருதூர - உப்பரிகைகளிலுள்ள பெண்கள் கைகளினால் எறிகின்ற கழங்கு சூரியனுடைய பதத்தை அணைகின்ற மருதூரையுடையவரே,—கருணை நின் புகழ் அலாத வல் சொல் கதற்றும் பிதற்று உடைக் கள்வனுக்கு - திருவருளையுடைய உம்முடைய கீர்த்தியல்லாத கடிய சொற்களைக் கத்துகின்ற புலம்புதலையுடைய கள்வனுக்கு. எ-று. கள்வனுக்குத் தந்தருளு மெனக் கூட்டுக. (சகூ)

களங்கந்தரமனையாய்மூலமாயைகருமமென்னுங்
களங்கந்தரங்கெடநீர்சொரியாநிற்பக்கண்புளகங் [ங்
களங்கந்தரவென்னையாண்டருள்வாயென்றுகாவொழுக்கு
களங்கந்தரமழைபோன்மருதூர்நகர்காவலனே.

(இ - ள்.) களம் கந்தரம் அனையாய் - கழுத்து மேகத்தை ஒப்பாகப் பெற்றவரே,—மூலம் மாயை கருமம் என்னும் களங்கம் தரம் கெட - ஆணவமும் மாயையும் கருமமும் எனப்படும் (மும்) மலங்களும் வலிமை கெடும்பொருட்டு—கண் நீர் சொரியாநிற்ப அங்கம் புளகங்கள் தர - கண்கள் நீரைப் பொழியவும் சரீரம் உரோமஞ்சிலிர்த்தலைத் தரவும்—என்னை என்று ஆண்டருள்வாய் - என்னை எந்நாள் ஆண்டருள்வீர்—கா ஒழுக்கும் கள் அங்கு அந்தரம் மழை போல் மருதூர் நகர் காவலனே - சோலைகள் ஒழுக்குகின்ற தேன் அங்கே ஆகாயத்தினின்றும் பொழிகின்ற மழையை நிகர்க்கின்ற மருதூரென்னும் திருப்பதியைக் காத்தலையுடையவரே. எ-று. (௫0)

காவலராவரும்பர்க்கிறையாகுவர்கங்குன்மதிற்
காவலராவருங்கோற்கள்ளராயினுங்காலுகுக்குங்
காவலராவருந்தும்மருதூரரைக்கன்னிதன்பங்
காவலராவருந்தாரணிவாயென்றுகைதொழவே.

(இ-ள்.) காவலர் ஆவர் - அரசராவர்,—உம்பர்க்கு இறை ஆகுவர் - தேவர்களுக்கு நாயகனாகிய இந்திரனாவர்,—கங்குல் மதில் காவல் அராவரும் கோல் கள்ளர் ஆயினும் - இராத்திரியிலே மதிற்காவலை அராவுகின்ற கன்னக்கோலையுடைய திருடராயினும்,—கால் உகுக்கும் கா அலர் ஆ அருந்தும் மருதூரரை - காற்றுதிர்க்கின்ற சோலையினுள்ள பூக்களைப் பசுக்கள் உண்கின்ற மருதூரின்கண் எழுந்தருளியிராநின்ற சிவபெருமானை—கன்னிதன் பங்கா - உமாதேவியாருடைய பாகத்தையுடையவரே,—வல் அரா அரும் தார் அணிவாய் - வலிய

பாம்பாகிய அரிய மாலையை அணிபவரே,—என்று கை தொழு- என்று சொல்லிக் கையினாலே கும்பிட. எ-று. சிவபெருமானைக் கும்பிடத் திருடராயினும் அரசராவர் இந்திரனுவர் எனக் கூட்டுக. (ருக)

கையுடையானையதளங்கியானைக்கதம்பெறுவேங்
கையுடையானைமருதூரனைக்கருதார்கள்வன்ப
கையுடையானைத்தொழுதுவில்வேடன்கடுங்கணையாக்
கையுடையானைமடவாருயிர்க்கென்கரைவதுவே.

(இ-ள்.) கை உடை யானை அதள் அங்கியானை - புழைக்கையையுடைய யானையினது தோலாகிய சட்டையையுடையவரும்—கதம் பெறு வேங்கை உடையானை - கோபத்தைப் பெற்ற புலித்தோலாகிய வஸ்திரத்தையுடையவரும்—மருதூரனை - மருதூரையுடையவரும்—கருதார்கள் வல் பகை உடையானை - (தம்மைச்)சிந்தியாதவர்களுடைய வலிய பகையாகிய மலத்தைக் கெடுக்காதவருமாகிய சிவபெருமானை—தொழுது - வணங்கி,—வில் வேள் தன் கடும் கணை யாக்கையுள் தையா கை மடவார் - வில்லையுடைய மன்மதனுடைய கடுமையாகிய பாணங்கள் சரீரத்திலே தைத்து வருந்துகின்ற மங்கையர்—உயிர்க்குக் கரைவது என் - உயிர்ப்பொருட்டு இரங்குவது என்னை. எ-று. யாக்கையுட்டையா எனற்பாலது யாக்கையுடையா எனக் குறைந்து நின்றது. [பாங்கி வெறுத்துக் கூறல்.] (ருஉ)

கரைவானகங்குழைமெய்யடியார்க்குக்கலங்கவரக்
கரைவானகங்கொண்டடர்க்கும்பிரான்புரக்கள்ளவஞ்ச
கரைவானகந்தைகெடத்தகனஞ்செய்கடவுள்பொய்கைக்
கரைவானகந்தோமோமருதூரனெங்கட்கிறையே.

(இ-ள்.) அகம் குழை மெய் அடியார்க்குக் கரைவான் - மனநெகிழ்கின்ற மெய்த்தொண்டர்களுக்கு இரங்குவோ

ரும்—கலங்க அரக்கரை வால் நகம் கொண்டு அடர்க்கும் பிரான் - கலங்கும்படி இராக்கதனாகிய இராவணனை வெண்மையாகிய நகத்தைக்கொண்டு நெரித்த எப்பொருட்குமிறைவரும்—புரம் கள்ளம் வஞ்சகரை வான் அகந்தை கெடத் தகனம் செய் கடவுள் - முப்புரங்களிலுள்ள கள்ளத்தையும் வஞ்சகத்தையுமுடைய அசுரர்களைப் பெரிய செருக்கு அழியுமபடி எரித்தலைச் செய்த கடவுளும்—பொய்கைக்கரை வானகம் தொடும் மா மருதூரன் - வாவிக்கரை ஆகாயத்தை அளாவாநின்ற பெரிய மருதூரையுடையவருமாகிய சிவபெருமானே—எங்கட்கு இறை - எங்களுக்கு நாயகர். எ-று. (௬௩)

கட்டாமரையரமரர்க்குவேந்தர்கமலத்துழாய்க்
கட்டாமரையர் மருதூரிறைவர்கறையரவக்
கட்டாமரையர்மனமேயிருவினைக்கட்டறநங்
கட்டாமரையரென்றாட்கொண்டருள்கைக்குக்கற்பனையே

(இ - ள்.) கள் தாமரையர் - தேனையுடைத்தாகிய தாமரைமலரையுடையவராகிய பிரமர்வுக்கும்—அமரர்க்கு வேந்தர் - தேவர்களுக்கு அரசனாகிய இந்திரனுக்கும்—கமலம் துழாய் கண் தாமர் ஐயர் - செந்தாமரைமலரையும் துளசியையும் கண்ணும் மாலையுமாக உடையவராகிய விட்டுணுவுக்கும் பிதாவும்—மருதூர் இறைவர் - மருதூரின்கண் எழுந்தருளியிருக்கின்ற தலைவரும்—கறை அரவம் கட்டு ஆம் அரையர் - விடம்பொருந்திய பாம்பாலாகிய கட்டுப்பொருந்திய அரையையுடையவருமாகிய சிவபெருமான்—மனமே - நெஞ்சமே—இரு வினைக் கட்டு அற - இருவினைப்பந்தம் அறும்பொருட்டு—நங்கள் தாம் அரையர் என்று ஆட்கொண்டருள்கைக்குக் கற்பனை - நம்மிடத்தே தாம் நாயகரென்று அடிமைக் கொண்டருளுதற்கு விதியேயாம். எ-று. (௬௪)

கற்பனையத்தனையாயினுமின்புகழ்கற்பதூரான்
கற்பனையத்தனைக்காணச்சரவணப்பொய்கைவந்தோன்

கற்பனையத்தனையா மருதூருறைகாரணவக்
கற்பனையத்தனைபத்தர்குற்றத்தைக்கடிபவனே.

(இ - ள்.) நான் நின் புகழ் கற்பது அத்தனை கற்பனை ஆயினும் - நான் உமது கீர்த்தியைப் படிப்பது அவ்வளவும் பொய்யாமாயினும்—கற்ப நயத்தனை - படிப்பவைகளை விரும்பினீர்,—அச் சரவணம் பொய்கை வந்தோன் - அந்தச் சரவணப்பொய்கையின்கண்ணே திருவவதாரஞ்செய்தருளினவராகிய முருகக்கடவுளுக்கும்—கல் பனை அத்தன் ஐயா - (மாணிக்க) ரத்தினத்தாலாகிய பனைபோன்ற கையையுடையவராகிய விநாயகக்கடவுளுக்கும் பிதாவே,—மருதூர் உறை காரண - மருதூரின்கண் எழுந்தருளியிருக்கின்ற காரணரே,—அக் கற்பு அனை அத்த - அந்தக் கற்பையுடைய மாதாவாகிய உமாதேவியாரைப் பாதியாகவுடையவரே,—கை பத்தர் குற்றத்தைக் கடிபவனே - வருந்துகின்ற அன்பர்களுடைய குற்றத்தையொழிப்பவரே. எ-று. காண் அசை. (௫௫)

கடியவம்போடிகல்கண்ணியைக்கண்கெலங்கிநெஞ்சிற்
கடியவம்போய்நின்றழிந்தனன்காண்குற்றங்கண்டெனைநீ
கடியவம்போதமுன்கண்டதுண்டோவண்டின்காலனையக்
கடியவம்போருகங்காண்மருதூரான்கல்வரைக்கே.

(இ - ள்.) கடிய அம்போடு இகல் கண்ணியைக் கண்டு கலங்கி - கூர்மையையுடைய பாணத்தோடு பகைக்கின்ற கண்ணையுடையவளாகிய பெண்ணைக் கண்டு மயங்கி—நெஞ்சில் கடி அவம் போய் நின்று அழிந்தனன் - மனதின்கணுள்ள காவல் வீண் போய் நின்று வருந்தினேன்,—குற்றம் கண்டு எனை நீ கடிய அம் போதம் முன் கண்டது உண்டோ - குற்றத்தைக் கண்டு என்னை நீ கோபிக்க அழகிய அறிவை முன்னே கானறிந்ததுண்டோ—வண்டின் கால் அனையக் கடி அ அம் போருகம் கால் மருதூர் அரன் கல் வரைக்கு - வண்டினுடைய

கால்கள் பொருந்த மணத்தை அந்தத் தாமரைமலர்கள் கால்கின்ற மருதூரின்கணெழுந்தருளியிருக்கும் சிவபெருமானது கல்லாகிய மலையினிடத்து. எ-று. காண் அசை. [தலைவன் பாங்கனுக்கு உற்றதுரைத்தல்.] (௬சு)

கல்லாரமாலைமென்கூந்தற்கைக்காந்தட்கவுரிபங்கன்
கல்லாரமாலைத்திகழ்மருதூரிற்பொய்கைக்குண்மணிணைக்
கல்லாரமாலையங்கையாற்றொழார்சைவகாவியங்கள்
கல்லாரமாலயன்காணுப்பதமெங்ஙன்காண்குவரே.

(இ - ள்.) கல்லாரம் மாலை மெல் கூந்தல் கைக் காந்தள் கௌரி பங்கன் - செங்கழுநீர்மாலையையணிந்த மெல்லிய அளகத்தையும் கைகளாகிய காந்தட்பூக்களையுமுடைய உமாதேவியாருடைய பாகராகிய சிவபெருமானுடைய—கல் ஆரம் மாலைத்திகழ் மருதூரில் - இரத்தினங்களும் முத்துக்களும் மாலைக்காலத்தின்கண்ணே விளங்குகின்ற மருதூரினிடத்ததாகிய—பொய்கைக்குள் மணிணைக் கல்லார் - வாவியினுள்ள மண்ணைத் தோண்டார்கள்,—அம் ஆலயம் கையால் தொழார் - அழகிய திருக்கோயிலைக் கைகளினாலே கும்பிடார்கள்,—சைவ காவியங்கள் கல்லார் - சைவகாவியங்களைப் படியார்கள்,—அ மால் அயன் காணுப் பதம் எங்ஙன் காண்குவர் - அந்தவிட்டுணுவும் பிரமாவும் காணாத திருவடிகளை எப்படி (இவர்கள்) தரிசிப்பார்கள்! எ-று. (௬எ)

குவலயங்கற்பகநாடரவப்பதிகும்பிடுஞ்செங்
குவலயங்கட்பொழிவார்மருதூரிறைகூரயிலா
குவலயங்கற்பொடியாகத்தொடுங்கந்தர்கோக்கொற்றவா
குவலயங்கட்செவியாகக்கொள்வாரெங்குலதெய்வமே.

(இ - ள்.) குவலயம் கற்பகம் நாடு அரவம் பதி கும்பிடும் - பூமியும் கற்பகதருவையுடைய தேவலோகமும் நாகலோகமும் கும்பிடுகின்ற—செங்குவலயம் கள் பொழி வார் மருதூர்

இறை - செங்குவளைமலர்கள் தேனைப் பொழிகின்ற நீரினாலே சூழப்பட்ட மருதூரின்கணெழுந்தருளியிருக்கும் நாயகரும்—கூர் அயில் ஆகு வலயம் கல் பொடி ஆகத் தொடும் கந்தர் கோ - கூரிய வேலாகிய வல்லயத்தைக் கிரௌஞ்சமலை தூகளாகும்வண்ணம் தொடுத்த முருகக்கடவுளுக்குத் தலைவரும்—சொற்றம் வாருவலயம் கட்செவி ஆகக் - கொள்வார் - வெற்றியையுடைய தோளணி பாம்பாகக் கொள்வோருமாகிய சிவபெருமான்—எம் குலதெய்வம் - நம்முடைய குலதெய்வம். எ-று. (நிஅ)

குலஞ்சுகந்தாதிகள்விட்டுத்தவவுருக்கொண்டுநெஞ்சா
குலஞ்சுகந்தாகம்பொய்மோகந்தவிர்ந்துகுணத்திரயங்[கோ
குலஞ்சுகந்தாட்பட மாட்டாவெனைப்பணி கொண்டதென்
குலஞ்சுகந்தாதுகொய்காமருதூர்க்குன்றக் கோதண்டனே.

(இ - ள்.) குலம் சுகந்த ஆதிகள் விட்டு - குலத்தையும் சுகந்தமுதலியவற்றையும் விடுத்து—தவம் உருக்கொண்டு - தவவேடத்தைப் பூண்டு—நெஞ்சு ஆகுலம் சுகம் தாகம் பொய் மோகம் தவிர்ந்து - மனசினுள்ள வருத்தத்தையும் சுகத்தையும் தாகத்தையும் பொய்யையும் மோகத்தையும் நீங்கி—குணத்திரயம் குலஞ்சு உகந்து ஆட்படமாட்டா எனை - முக்குணங்களுங்குலைந்து மகிழ்ந்து அடிமைப்பட மாட்டாத என்னை—பணி கொண்டது என் - அடிமைக்கொண்டதென்னை—கோகுலம் சுகம் தாது கொய் கா மருதூர்க் குன்றம் கோதண்டனே - குயில்களும் கிளிகளும் பூந்தாதைக் கொய்யாநின்ற சோலைகளினாலே சூழப்பட்ட மருதூரின்கணெழுந்தருளியிருக்கும் மகாமேருமலையாகிய வில்லையுடையவரே. எ-று. கோகிலம் கோகுலம் என மருவிற்று. (நிகூ)

தண்டலைநாகங்கள்பூகங்கள்சூழ்ந்தடஞ்சுனையிற்
றண்டலைநாகங்கணை கழுநீர்முகைசற்றுவிண்ட

தண்டலைநாகங்கொலென்றஞ்சிமாறெனத்தன்னிழன்மேற்
றண்டலைநாகந்தவிர்மருதூரனென்றாபரமே.

(இ - ள்) தண்டலை நாகங்கள் பூகங்கள் சூழும் தடம் சுனையில் - சோலைகளினுள்ள புன்னைமரங்களும் கமுகமரங்களும் சூழாநின்ற பெரிய சுனையினிடத்தே—தண் தலை நாகு அங்கு அலை கழுநீர் முகை சற்று விண்ட தண்டு - குளிர்மையையுடைய பெரிய சங்குகள் அங்கே சேர்ந்த கழுநீர்முகை சிறிது அலர்ந்த தண்டை—அலை நாகம் கொல் என்று அஞ்சி - அசைகின்ற பாம்போவென்று பயந்து—மாறு எனத் தன் நிழன்மேல் தண்டலை நாகம் தவிர் மருதூரன் - தன்பகையென்று தனது நிழலின்மேலே எதிர்த்தலை யானை நீங்குகின்ற மருதூரையுடையவராகிய சிவபெருமான்—என் தாபரம் - என்னுடைய துணை. எ-று. (௬௦)

தாபரசங்கமொராறுக்கும்போற்றுஞ்சதுர்மறைக்குந்
தாபரசங்கவயன்மருதூர்நகர்தங்கியநா
தாபரச்சங்கமர்சாடக்கொண்டாய்சுந்தரற்குச்செற்றூ
தாபரசங்கரவல்வினையேற்குன்சரணங்களே.

(இ - ள்.) பரசு அங்கம் ஓராறுக்கும் போற்றும் சதுர் மறைக்கும் தாபர - துதிக்கப்படும் ஆறுவேதாங்கங்களுக்கும் (உம்மைத்) துதிக்கும் நான்குவேதங்களுக்கும் நிலையாயுள்ளவரே,—சங்கம் வயல் மருதூர் நகர் தங்கிய நாதா - சங்குகளையுடைய வயல்களினாலே சூழப்பட்ட மருதூரென்னும் திருப்பதியின்கண் எழுந்தருளியிருந்த தலைவரே,—பரக் அங்கு அமர் சாடக் கொண்டாய் - மழுவை அங்கே போரின்கண்ணே (பகைவரைக்) கொல்லும்பொருட்டுத் தாங்கினவரே,—சுந்தரற்குச் செல் தூதா - சுந்தரமூர்த்திநாயனார்பொருட்டுச்சென்ற தூதரே,—பர - மேலானவரே,—சங்கர - சுகத்தைச்செய்பவரே,—வல் வினையேற்கு உன் சரணங்கள் தா - வலிய வினை

மையுடையேனுக்கு உம்முடைய திருவடிகளைத் தந்தருளும். எ-று. [பூட்டுவிற்பொருள்கோள்.] (௬௧)

சரக்கன்றுகந்தமலரோற்குமேற்பதந்தண்கழுநீர்ச்
சரக்கன்றுகந்தர்ப்பனையெரித்தோரிருதாட்கடக்குஞ்
சரக்கன்றுகந்தன்றனக்கையர்பொய்யர்தமக்ககலீ
சரக்கன்றுகந்தவர்தென்மருதூரர்தமர்களுக்கே.

(இ-ள்.) கந்தம் மலரோற்கு மேல் பதம் சரக்கு அன்று - மணத்தையுடைய தாமரைமலரிலிருக்கும் பிரமனுக்குமேலாகிய பதமும் ஒருபொருளன்று,—தண் கழுநீர்ச் சரம் கன்று கந்தர்ப்பனை எரித்தோர் - குளிர்மையையுடைய கழுநீர்மலராகிய அம்பையுடைய கோபிக்கின்ற மன்மதனை எரித்தவரும்—இருதாள் கடம் குஞ்சரம் கன்று கந்தன் தனக்கு ஐயர் - இரண்டுபாதங்களையும் மதத்தையுமுடைய யானைக்கன்றாகிய விநாயகக்கடவுளுக்கும் முருகக்கடவுளுக்கும் பிதாவும்—பொய்யர் தமக்கு அகல் ஈசர் - பொய்யர்களுக்கு அகன்ற தலைவரும்—அக்கு அன்று உகந்தவர் - எலும்புமணியை அந்நாளிலே மகிழ்ந்தணிந்தவரும்—தென் மருதூரர் தமர்களுக்கு - அழகிய மருதூரையுடையவருமாகிய சிவபெருமானுடைய அடியார்களுக்கு. எ-று. (௬௨)

தமரவரிக்களிவண்டூதுன்றுங்கொன்றைத்தாமரன்பர்
தமரவரிக்குவயன்மருதூரர்பொற்றூளுயிரார்க்
தமரவரிக்கிறையார்க்கரிதானுக்தமைவணங்குத்
தமரவரிக்குமிதயத்தியானந்தனக்கெளிதே.

(இ-ள்.) தமரம் வரிக் களி வண்டு ஊது உன்றும் கொன்றைத் தாமர் - இசையையுடைய புள்ளியைப்பொருந்திய களிப்பையுடைய வண்டுகள் நெருங்குகின்ற கொன்றைமாலையையுடையவரும்—அன்பர் தமரவர் - பத்தர்களுக்கு உறவினரும்—இக்கு வயல் மருதூரர் - கரும்புகளையுடைய வயல்களி

ஞூலே சூழப்பட்ட மருதூரையுடையவருமாகிய சிவபெருமா னுடைய—பொன் தாள்-பொன்போலுந்திருவடிகள்,—உயிர் ஆர்ந்த மரம் அரிக்கு இறையார்க்கு அரிதானும் - உயிரைப் போன்ற மரத்திலே சஞ்சரிக்கின்ற அநுமாருக்கு இறைவரா கிய விட்டுணுவுக்கு அரியனவாயினும்,—தமை வணங்கு உத் தமர் வரிக்கும் இதயம் தியானம் தனக்கு எளிது - தம்மை வணங்குகின்ற மேலோர்களுடைய விரும்புகின்ற இருதயத் திலே செய்யப்படும் தியானத்துக்கு எளியனவாம். எ-று. (௬௩)

தனக்கடங்காநெஞ்சனென்றெனைக்கொண்டுதருமன்செல்வி
தனக்கடங்காவனின்றுண்மருதூரநற்சந்திரவ
தனக்கடங்கால்கும்பந்தும்பிக்கொம்பென்னச்சமைந்தவிரு
தனக்கடங்காம்பலஞ்செங்கனிவாய்மங்கைதன்பங்கனே.

(இ - ள்.) தனச்கு அடங்கா நெஞ்சன் என்று-தனக்கடங் காத மனத்தையுடையவனென்று—எனைக்கொண்டு தருமன் செல் விதனம் கடம் - என்னைக்கொண்டு இயமன் செல்லா நின்ற வேதனையையுடைய அருநெறியிலே—காவல் நின்று ஆள் - காவலாக நின்று ஆண்டருளும்,— மருதூர - மருதூரை யுடையவரே,—நல் சந்திரன் வதனம் - நன்மையாகிய சந்தி ரனைப்போலும் முகத்தையும்—கடம் கால் கும்பம் தும்பிக் கொம்பு என்னச் சமைந்த இரு தனம் - மதத்தைச் சொரிகி ன்ற மத்தகத்தையுடைய யானையினது கோடுபோல அமைந்த இரண்டுமுலைகளையும்—கள் தங்கு ஆம்பல் அம் செம் கனி வாய் - தேன் பொருந்திய செவ்வாம்பன்மலர்போலும் அழ கிய சிவந்த கனிந்த வாயையுமுடைய—மங்கை தன் பங் கனே - உமாதேவியாருடைய பாகரே. எ-று. (௬௪)

பங்கமுகந்தலைமோதக்கயலினம்பாய்ந்துழைந்தட்
பங்கமுகந்தலைசேர்மருதூரபருப்பதத்தாள்

பங்கமுகந்தலைதேய்ந்திடவெண்டிங்கள்பட்டபெரும்
பங்கமுகந்ததலைவநின்பாதம்பரமெனக்கே.

(இ - ள்.) பங்கம் முகந்து அலை மோத - சேற்றை முகந்து திரைகள் (கரையிலே) மோத—கயல் இனம் பாய்ந்து பைம் தட்பம் கமுகு அம் தலை சேர் மருதூர - கயற்கூட்டங்கள் பாய்ந்து பசிய குளிர்மையையுடைய கமுகமரங்களினது தலையிலே சேர்கின்ற மருதூரையுடையவரே,—பருப்பதத்தாள் பங்க - பார்ப்பதிதேவியாருடைய பாகரே,—முகம் தலை தேய்ந்திட வெள் திங்கள் பட்ட பெரும் பங்கம் உகந்த தலைவ - முகமுந்தலையுந்தேய வெண்மையாகிய சந்திரன் அநுபவித்த பெருந்தோல்வியை மகிழ்ந்தருளிய நாயகரே,—நின் பாதம் எனக்குப் பரம் - உம்முடைய திருவடிகள் எனக்குத் தஞ்சம். எ-று. (கூ0)

பரவாதிருக்கைமருவாகமத்தைப்பழித்துப்பண்ணிற்
பரவாதிருக்கைதிருவுளமோவலைபவாவெடுத்த
பரவாதிருக்கைமழுநாததேவர்பணிமருதூர்ப்
பரவாதிருக்கையறுத்தென்னையாளும்பதந்தரவே.

(இ - ள்.) பரவாது - (உம்மை) வணங்காமலும்—இருக்கை மருவு ஆகமத்தைப் பழித்துப் பண்ணில் பரவாது - வேதங்களையும் பொருந்திய சைவாகமங்களையும் நிந்தித்து இசையோடு துதியாமலும்—இருக்கை திருவுளமோ - இருத்தல் திருவுள்ளமா!—வலை பண்டு எடுத்த பரவா - வலையை முன்னாளிலேயெடுத்த பரவருருக்கொண்டவரே,—திருக் கை மழு நாத - அழகிய கையிலே தாங்கப்பட்ட மழுவையுடைய தலைவரே,—தேவர் பணி மருதூர்ப் பர - தேவர்கள் வணங்குகின்ற மருதூரின்கணெழுந்தருளியிருக்கும் மேலானவரே,—வா - வந்தருளும்,—இருக்கை அறுத்து என்னை ஆளும் பதம் தர - குற்றத்தையொழித்து என்னை ஆண்டருள்கின்ற திருவடிகளைத் தரும்பொருட்டு. எ-று. (கூக)

பதங்கடந்தா ணிரைத்தன்னபன்மாதர்கள்பற்றறநற்
பதங்கடந்தாலென்னகைம்மாறுசெய்வன்பகைத்தபருப்
பதங்கடந்தான்பட்டகைம்மாவுரித்தபரமன்மறைப்
பதங்கடந்தான்புகழ்மாமருதூர்மங்கைபங்கினனே.

(இ-ள்.) பதங்கள் தந்தால் நிரைத்து அன்ன பல் மாதர்கள் பற்று அற - சோறுகளை நூலினாலே நிரைத்தாற்போன்ற பற்களையுடைய பெண்களிடத்ததாகிய ஆசை நீங்கும்பொருட்டு—நல் பதங்கள் தந்தால் - நன்மையாகிய திருவடிகளைத் தந்தருளினால்—என்ன கைம்மாறு செய்வன் - என்ன பிரதியுபகாரத்தைச் செய்வேன்!—பகைத்த பருப்பதம் கடந்தான் பட்ட கைம் மா உரித்த பரமன் - பகைத்த மலைபோலும் மதந்தான் பட்ட யானையையுரித்த மேலானவரும்—மறைப் பதம் கடந்தான்—வேதத்தினது சொல்லைக் கடந்தவரும்—புகழ் மா மருதூர் மங்கை பங்கினன் - கீர்த்தியையுடைய பெரிய மருதூரில் எழுந்தருளியிருக்கின்ற உமாதேவியாருடைய பாகருமாகிய சிவபெருமான். எ-று. சிவபெருமான் திருவடிகளைத் தந்தருளினால் எனக் கூட்டுக. (கஎ)

பங்கையவாவியனையாட்களித்தபரமன்மன்றற்
பங்கையவாவிமருதூரிலோரிறைபாரவல்லி
பங்கையவாவியிவண்மேவிடுமப்புழையுமின்
பங்கையவாவிம்மணமுமினிதல்லபாவையரே.

(இ-ள்.) பங்கை அவ் ஆவி அனையாட்கு அளித்த பரமன் - (தமது) பாகத்தை அவ்வுயிர்போலும் உமாதேவியாருக்குக் கொடுத்தருளிய சிவபெருமானுடைய—மன்றல் பங்கயம் வாவி மருதூரில் - மணத்தையுடைய தாமரைவாவிகளாலே சூழப்பட்ட மருதூரின்கண்ணே—ஓரிறை - ஒரு தலைமகன்—பாரம் வல் இபம் கை அவாவி இவண் மேவிடும் அப்புழை - பாரமாகிய வலிய யானை புழைக்கையினாலே அவாவி

இவளை மேலிட்ட அந்தப்பகையை—அடும் இன்பம் சுயவா - விலக்கிய இன்பம் வெறுக்கப்படாது,—இம் மணமும் இனிது அல்ல - இந்தமணமும் இனியதன்று,—பாவையரே - பெண்களே. எ-று. [மணம் விலக்கு.] (கூஅ)

பாவகனஞ்சக்கரந்துணித்தாய்பதமாறுநடப்
பாவகநஞ்சக்கறைமிடற்றாய்மருதூர்ப்பரம
பாவகனஞ்சத்திகுன்றநின்றாளைப்பரந்தமலம்
பாவகநஞ்சர்ச்சனைபுரிந்தென்றுபணிவதுவே.

(இ - ள்.) பாவகன் அஞ்சக் கரம் துணித்தாய் - அக்கினிதேவன் அஞ்சும்வண்ணம் கையை வெட்டினவரே,—பதம் மாறு நடம் பாவக - பாதம் மாறிய நிருத்தத்தினது பாவகத்தையுடையவரே,—நஞ்சம் கறை மிடற்றாய் - விடத்தையுடைய கருமையாகிய கழுத்தையுடையவரே,—மருதூர்ப் பரம - மருதூரின்கணெழுந்தருளியிருக்கும் மேலானவரே,—பாவம் கனம் சத்தி குன்ற-பாவத்தினது மிகுதியாகிய வலிமை குன்றும்பொருட்டு—நின் தாளை - உம்முடைய திருவடிகளை—பரந்த மலம் பாவு அகம் நைஞ்சு - விரிந்த மலம் பரவிய மனம் நைந்து—அர்ச்சனை புரிந்து பணிவது என்று - பூசை செய்து வணங்குவது எந்நாள்! எ-று. (கூகூ)

பணியாதவர்க்கத்தொடர்ச்சிக்கும்பத்திரபத்தர்சித்தப்
பணியாதவர்க்கருள்செய்மருதூரபடவரவப்
பணியாதவர்க்குன்றவென்றவன்றாட்செம்பதுமநெஞ்சே
பணியாதவர்க்குமதிக்குமப்பாலைப்பதந்தரவே.

(இ - ள்.) பணி யாது - (உனக்குத்) தொழில் யாது!—அவர்க்கத்தொடு அர்ச்சிக்கும் பத்திரம் பத்தர் சித்தம் பணியா-அந்த உபகரணங்களோடு பூசிக்கின்ற பத்திரங்களையுடைய அன்பர்களது சித்தத்திலுள்ள தொண்டையுடையவரே,—தவர்க்கு அருள் செய் மருதூர - முனிவர்களுக்குக் கருணை

யைச் செய்கின்ற மருதூரையுடையவரே,—படம் அரவம் பணியா - படத்தையுடைய பாம்பாகிய ஆபரணத்தையுடையவரே,—தவர்க் குன்ற என்று - வில்லாயுள்ள மலையையுடையவரே என்று சொல்லி—அவன் தாள் செம் பதுமம் - அவருடைய திருவடிகளாகிய செந்தாமரைமலர்களை—நெஞ்சே பணி - மனமே நீ வணங்குவாயாக,—ஆதவர்க்கும் மதிக்கும அப்பால் பதம் தர - சூரியனுக்கும் சந்திரனுக்கும் அப்பாலுள்ள பதத்தைத் தரும்பொருட்டு. எ-று. அப்பாலை என்பதன் ஐ சாரியை. (எ0

வேலைக்கையலைக்கவர்விழியார்வசம்வீழ்ந்துனது
வேலைக்கையலைக்கண்டுமுயலேன்புக்கவேளையுண்டோய்
வேலைக்கையலைத்துவருங்கொல்கூற்றைவெறுத்துயிர்போம்
வேலைக்கையலைப்புனன்மருதூர்முக்கண்மெய்ப்பயனே.

(இ - ள்.) வேலைக் கயலைக் கவர் விழியார் வசம் வீழ்ந்து - கடலையும் கயன்மீனையும் கவர்கின்ற கண்களையுடைய பெண்களது வசத்தில் அழுந்தி—உனது வேலைக்கு அயலைக் கண்டும் முயலேன் - உம்முடைய தொண்டுக்கு அயலாரைக் கண்டும முயல்கின்றிலேன்,—புக்க வேளை உண்டோய்-புகுந்த மன்மதனைக் கொன்றவரே,—வேலைக் கை அலைத்து வரும் கொலகூற்றை வெறுத்து உயிர் போம் வேலைக் கை - வேலாயுதத்தைக் கையினாலே அசைத்து வருகின்ற கொல்கின்ற இயமனை வெறுத்து ஆன்மாப் போகின்றபொழுது கோபித்தருளும்,—அலைப் புனல் மருதூர் முக்கண் மெய்ப் பயனே - திரையையுடைய நீரினாலே சூழப்பட்ட மருதூரின்கணெழுந்தருளியிருக்கின்ற மூன்றுகண்களையுடைய மெய்ப்பயனாயுள்ளவரே. எ-று. (எக)

பயனக்தசகமலரிற்றுயிலப்பமருதூர்ப்
பயனத்துறைகப்பகலைக்கண்டோன்பத்தர்சித்தத்துள்ளான்

பயனந்தனாகமணிவோன்கழலைநும்பல்பிறவிப்
பயநந்தநாகந்துதிக்கவணங்கப்பரிந்திருமே.

(இ - ள்.)* பயம் நந்து அம் நாகம் மலரின் துயிலப்படும் மருதூர்ப் பயன் - நீரிலுள்ள சங்குகள் அழகிய புன்னைப்பூவின்கண்ணே நித்திரைசெய்கின்ற மருதூரின்கணெழுந்தருளியிராநின்ற பயனாயுள்ளவரும்—அந்தன் ஆகப் பகலைக் கண்டோன் - குருடனாரும்பொருட்டுச் சூரியனைச் செய்தவரும்—பத்தர் சித்தத்து உள்ளான் - அன்பர்களுடைய இருதயத்தின்கண் உள்ளவரும்—பை அனந்தன் ஆகம் அணிவோன் கழலை - படத்தையுடைய அனந்தனைத் திருமார்பின்கண்ணே அணிபவருமாகிய சிவபெருமானுடைய திருவடிகளை—நும் பல் பிறவிப் பயம் நந்த - உங்களுடைய பலவாகிய பிறப்புக்களினுள்ள அச்சங்கெடும்பொருட்டு—நா துதிக்கக் கம் வணங்கப் பரிந்து இரும் - நாக்குத் துதிக்கத் தலை வணங்க அன்புகூர்ந்து இருங்கள். எ-று. (௭௨)

இரும்பலவின்செய்மருதூரென்றார்தமிதயங்கள்போ
லிரும்பலவின்னலதுதீரவேண்டிடினிவ்வுலகுள்
ளிரும்பலவின்பமிலையாயினுமஞ்செழுத்தையுன்னி
யிரும்பலவின்சொலொடும்புகழ்ந்தேத்தியிரந்துகொண்டே

(இ - ள்.) இரும் பலவின் செய் மருதூர் என்றார் தம் இதயங்கள் போல் இரும்பு அல - பெரிய பலாமரங்களையுடைய வயல்களாலே சூழப்பட்ட மருதூர் என்று சொல்லாதவர்களுடைய நெஞ்சங்களைப்போல உங்கள் நெஞ்சங்களும்) இரும்பல்ல,—இன்னலது தீர வேண்டிடின் - துன்பம் நீங்க வேண்டின்,—இவ் உலகு உள்ளீர் - இவ்வுலகத்தின்கண் உள்ளவர்களே,—உம்பல இன்பம் இலை ஆயினும் - யானையையுடைய இன்பம் இல்லையாயினும்—அஞ்சுஎழுத்தை உன்னி இரும் - பஞ்சாக்ஷரத்தைச் சிந்தித்திருங்கள்—பல இன் சொல்

லொடும் புகழ்ந்து எத்தி இரந்துகொண்டு - பலவாகிய இனிய சொற்களோடும் புகழ்ந்து துதித்துயாசித்துக்கொண்டு. எ-று.

இரவிதநந்தும்பரவையைச்சுந்தரரெய்தச்சென்றோ
னிரவிதனஞ்சயன்றிங்களங்கண்ணனெழிற்கரும்ப
யிரவிதனம்புணரும்மருதூரனிணையடியை
யிரவிதனங்களறுத்துயிர்வாழுகைக்கென்னெஞ்சமே.

(இ - ள்.) இரவு இதம் நந்தும் பரவையைச் சுந்தரர் எய்தச் சென்றோன் - இராத்திரியிலே அன்பு மிகுகின்ற பரவையாரைச் சுந்தரமூர்த்திநாயனார் அடையும்பொருட்டுத் தூது போனவராயும்—இரவி தனஞ்சயன் திங்கள் அம் கண்ணன் - சூரியனும் அக்கினியும் சந்திரனுமாகிய அழகிய கண்களையுடையவராயும்—எழில் கரும் பயிரவி தனம் புணரும் மருதூரன் - அழகையுடைய கரிய உமாதேவியாருடைய முலைகளைப் புணர்கின்ற மருதூரையுடையவராயுமுள்ள சிவபெருமானுடைய—இணை அடியை இர - இரண்டுதிருவடிகளையும் இரப்பாயாக—விதனங்கள் அறுத்து உயிர் வாழுகைக்கு - துயரங்களையொழித்து உயிர்வாழ்தற்பொருட்டு,—என் நெஞ்சமே - என்மனமே. எ-று. (௭௪)

என்னாவருந்தக்கழுநீர்க்கிடங்கெங்குமீன்கறவை
யென்னாவருந்துமலர்மருதூருறையீசநம
வென்னாவருந்தமிழாற்றுதிப்பேன்பயனெய்தவிங்
கென்னாவருந்தன்மைவல்லியமாவுனக்கென்னிடத்தே.

(இ - ள்.) என் நா வருந்த - என்னுடைய நாக்கு வருந்தும்படி—கழுநீர்க் கிடங்கு எங்கும் ஈன் கறவை என் ஆ அருந்தும் மலர் மருதூர் உறை ஈச நம என்று - செங்கழுநீரையுடைய குளமெங்கும் ஈன்ற கறவையெனப்படும் பசுக்கள் உண்கின்ற பூக்களையுடைய மருதூரின்கண் எழுந்தருளியிராநின்ற சிவபெருமானே வணக்கம் என்று—அரும் தமிழால்

துதிப்பேன் - அருமையாகிய தமிழினாலே துதிப்பேன்,—ஆ வல் இயமா - ஆ வலிய இயமனே,—என்னிடத்து வருந் தன்மை உனக்கு இங்கு எய்துவது பயன் என் - என்னிடத்து வருந்தன்மையினாலே உனக்கு இங்கே வருவதாகிய பயன் யாது! எ-று. (௭௫)

இடத்தேயுமையைவைத்தோன்மருதூருறையெந்தைவன்ம
யிடத்தேயுமைவண்ணனையுதைத்தோன் வெற்பினிங்ஙனெங்
ளிடத்தேயுமைவரப்பெற்றதுநன்றியின்றேந்தியமுத் [க
திடத்தேயுமையவிடையதிபாரவிளமுலைக்கே.

(இ - ள்.) இடத்தே உமையை வைத்தோன் - இடப்பாகத்திலே உமாதேவியாரை வைத்தவரும்—மருதூர் உறை எந்தை - மருதூரின்கண் எழுந்தருளியிருக்கின்ற எமது பிதாவும்—வல் மயிடத்து எயும் மை வண்ணனை உதைத்தோன் வெற்பின் - வலிய எருமைக்கடாவின்மேலே பொருந்திய கருநிறத்தையுடையவனாகிய இயமனை உதைத்தவருமாகிய சிவபெருமானுடைய மலையின்கண்ணே—இங்ஙன் எங்களிடத்தே உமை வரப் பெற்றது நன்றி - இப்படி எங்களிடத்தே உம்மை வரும்வண்ணம் பெற்றது நன்மையாம்,—இன்று ஏந்திய முத்து அதிபாரம் இளமுலைக்கு இட - இப்பொழுது (நீர் கையுறையாகத்) தாங்கிய முத்துமாலையை அதிகபாரத்தையுடைய இளமையாகிய தனங்களினிடத்து அணிய—ஐயம் இடை தேயும் - (உண்டோ இன்றோ என்னும்) ஐயத்தையுடைய இடையானது தேய்ந்துவிடும். எ-று. [பாங்கி கையுறை மறுத்தல். (௭௬)

முலையம்புலவிறைபங்கர்கங்காளர்முதன்மருதூர்
முலையம்புலகங்கொளினுங்குன்றுமன்றன்மொய்குழனின்
முலையம்புலவிகெடத்தழுவேமதன்மூன்றம்பெய்தான்
முலையம்புலவுமினியாவிலைமுடித்திடுமே.

(இ - ள்.) முலை அம் புலம் இறை பங்கர் - முல்லை நிலத்துக்குத் தலைவராகிய விட்டுணுவைப் பாகத்திலுடையவரும்—கங்காளர் - முழுவெலும்பையணிந்தவருமாகிய சிவபெருமானுடைய—முதல் மருதூர் - முதன்மையாகிய மருதூரின் கண்ணே,—முலை அம்பு உலகம் கொளினும் குன்று மன்றல் மொய் குழல் - கற்பானது சமுத்திரசலம் உலகத்தைக்கொள்ளினும் அழியப்பெறுத மணத்தையுடைய நெருங்கிய அளகத்தையுடைய பெண்ணே,—நின் முலை அம் புலவி கெடத் தழுவேம் - உன்னுடைய தனங்களை அழகிய புலவி நீங்கும வண்ணம் அணைகின்றிலேம்,—மதன் மூன்று அம்பு எய்தான் - மன்மதன் (தாமரை சூதம் அசோகமென்னும் முதன்) மூன்று பாணங்களைத் தொடுத்தான்,—முலை அம்பு உலவும - முல்லையாகிய (நான்காம்) பாணம் (வந்து) உலவுகின்றது,—இனி நீலம் ஆவி முடித்திடும் - இனி நீலோற்பலமாகிய ஐந்தாம்பாணம் உயிரைக் கொன்றுவிடும். எ-று. [தலைவன் தலைவிக்குத் தன் வருத்தங்கூறல்.] (எஎ)

முடியப்படுவலைவீசும்பரவவெம்முப்புரவர்
முடியப்படுகணைதொட்டவனேமருதூரமுன்னோய்
முடியப்புபுலித்தோலரைமேவுமுதல்வவென்னை
முடியப்படுபிறவிக்கடல்வீழமுனிந்தனையே.

(இ - ள்.) முடியப்படு வலை வீசும் பரவ - முடியப்பட்ட வலையை வீசுகின்ற பரவரே,—வெம் முப்புரவர் முடியப்படு கணை தொட்டவனே - கொடுமையாகிய முப்புரங்களையுடையவசுரர் இறக்கும்பொருட்டுக் கொல்கின்ற அம்பை எய்தவரே,—மருதூர - மருதூரையுடையவரே,—முன்னோய்-அநாதியாயுள்ளவரே,—அப்பு முடி அடு புலித் தோல் அரை மேவு முதல்வ - கங்கைநீர் முடியிலும் கொல்கின்ற புலித்தோல் அரையிலும் பொருந்திய முதல்வரே,—என்னை முடியப் படு

பிறவிக் கடல் வீழ முனிந்தனை - என்னை முழுமையும் அழுந்துகின்ற பிறவிக்கடலிலே விழும்வண்ணம் கோபித்தீர். எ-று.

முனியாயமானுடர்க்காவந்தகனைமுனிந்தவனே
முனியாயமானதமிழ்மருதூருறைமுக்கணனின்
முனியாயமாலையனென்றேத்துகைக்கன்புமுற்றுவித்து
முனியாயமாநிலத்திற்பிறவாமைநம்முன்வினையே.

(இ - ள்.) முன் நியாயம் மானுடர்க்கு ஆ அந்தகனை முனிந்தவனே-முன்னே நியாயத்தையுடைய மனிதருக்காக இயமனைக் கோபித்தவரே,—முனி ஆயம் ஆன தமிழ் மருதூர் உறை முக்கண - அகத்தியமுனிவரது பேறுகிய தமிழையுடைய மருதூரின்கண் எழுந்தருளியிருக்கின்ற மூன்றுகண்களையுடையவரே,—நின் முனி யாய் அ மால் ஐயன் என்று ஏத்துகைக்கு - உம்மைச் சிந்தித்து மாதாவே அந்த விட்டுணுவுக்குப் பிதாவே என்று துதிக்கும்பொருட்டு—அன்பு முற்றுவித்து - அன்பை முதிர்வித்து,—அம் மா நிலத்தில் பிறவாமை- அழகிய பெரிய பூமியின்கண்ணே (அடியேங்கள் இனிப்) பிறவாமைப்பொருட்டு—நம் முன் வினை முனியாய் - நமது முன்னைவினையைக் கோபித்தருளும். எ-று. (௭௯)

வினையகல்வித்தென்னையாண்டிடவேண்டும்விரைமலர்க்கா
வினையகல்வித்தகக்கண்ணிபங்காநட்மெய்ப்பயில்
வினையகல்வித்தனமாதர்க்குமோகம்விளைத்தருள்க
வினையகல்வித்தலையாமருதூர்மைம்மிடற்றவனே.

(இ - ள்.) வினை அகல்வித்து என்னை ஆண்டிடவேண்டும்-வினைகளையொழிவித்து என்னை ஆண்டருளவேண்டும்,—விரைக் காவி மலர் ஐ அகல் வித்தகம் கண்ணி பங்கா - மணத்தையுடைய கருங்குவளைமலர் தளரப்பெற்ற அகன்ற சதுரப்பாட்டையுடைய கண்களையுடைய உமாதேவியாருடைய பாகரே,—நடம் மெய் பயில் அவிநய - கூத்தின்கண்ணே

திருமேனியிலே பயிலாநின்ற அபிநயங்களையுடையவரே,—கல்வி தனம் மாதர்க்கு மோகம் விளைத்தருள் கவின் ஐய-மலை யைப்போலும் பருமையாகிய முலைகளையுடைய பெண்களுக்கு மோகத்தை விளைவித்தருளிய அழகையுடைய ஐயரே,—கல்வித் தலைவா - கல்விக்குத் தலைவரே,—மருதூர் மை மிடற்றவனே - மருதூரின்கண் எழுந்தருளியிருக்கின்ற கரிய கழுத்தையுடையவரே. எ-று. (அ௦)

அவனியம்பாரழல்கால்விசும்பாயெங்குமானவனே
யவனியம்பான்முப்புரமெரித்தாய்தென்னணிமருதூ
ரவனியம்பாவித்தெனைவாவெனவடர்த்தந்தக
மவனியம்பாமுனருள்புரியாயுன்னடைக்கலமே.

(இ - ள்.) அவனி அம்பு ஆர் அழல் கால் விசும்பு ஆய் எங்கும் ஆனவனே - பூமியும் நீரும் நிறைந்த அக்கினியும் காற்றும் ஆகாயமுமாய் எங்குமாயவரே,—அவனி அம்பால் முப்புரம் எரித்தாய் - அந்த அக்கினியாகிய அம்பினாலே முப்புரங்களையும் எரித்தவரே,—தென் அணி மருதூர - அழகிய அலங்காரத்தையுடைய மருதூரையுடையவரே,—அந்தகன் ஆம் அவன் எனை அனியம் பாவித்து அடர்த்து வா என இயம்பாமுன் அருள் புரியாய் - இயமனாகிய அவன் என்னை வேறாகப் பாவித்துப் பொருது வாவென்று சொல்லாமுன் அருள் செய்யும்,—உன் அடைக்கலம் - உமக்கடைக்கலம். எ-று. ()

கலங்காமனந்தந்துகூற்றுவன்றோற்றிடுங்காலத்தடைக்
கலங்காமனந்தந்தருமருதூரையகஞ்சத்தண்ப
கலங்காமனந்தமுராரிதொழுஞ்சிவகாமமெனுங்
கலங்காமனந்தவிழித்தவனேகறைக்கந்தரனே.

(இ - ள்.) கூற்றுவன் தோற்றிடும் காலத்து அடைக்கலம் - இயமன்றோன்றும்பொழுது (உமக்கு) அடைக்கலம்,—கலங்கா மனம் தந்து கா - அஞ்சாத மனத்தைத் தந்து காக்க

ருளும்,—மன் நந்து அம் தரு மருதூர் ஐய - நிலைபெற்ற சங்கு களை நீர் தருகின்ற மருதூரின்கணெழுந்தருளியிருக்கின்ற பிதாவே,—கஞ்சத்தன் பகல் அம் கா மன் நந்தம் முராரி தொழும் சிவ - பிரமனும் சூரியனும் அழகிய கற்பகக்காவுக்கீசனாகிய இந்திரனும் நம்முடைய விட்டுணுவும் வணங்குகின்ற சிவனே,—காமம் எனும் கலம் காமன் நந்த விழித்தவனே - காமமெனப்படும் ஆபரணத்தையுடைய மன்மதன் கெடும்வண்ணம் விழித்தவரே,—கறைக் கந்தரனே - கரிய கழுத்தையுடையவரே. எ-று. (அஉ)

கந்தரவையனயன்மாலென்றிந்துகணபதிவேற்
கந்தரவையன்புகழ்மருதூரகரியதிருக்
கந்தரவையம்புகுந்தவனேமதன்காயங்கன
கந்தரவையம்பெய்தாலுய்யுமோவென்றன்காதலியே.

(இ - ள்.) கந்தரம் வையன் - மேகமாகிய வாகனத்தையுடைய இந்திரனும்—அயன் மால் - பிரமனும் விட்டுணுவும்—என்று இந்து - சூரியனும் சந்திரனும்—கணபதி வேல் கந்தர் அவ் ஐயன் புகழ் மருதூர - விநாயகக்கடவுளும் வேலாயுதத்தையுடைய முருகக்கடவுளும் அவ்வையனாரும் புகழ்கின்ற மருதூரையுடையவரே,—கரிய திருக் கந்தர - கரிய அழகிய கழுத்தையுடையவரே,—ஐயம் புகுந்தவனே - பிக்ஷைபுகுந்தவரே,—மதன் காயம் கனகம் தா ஐயம்பு எய்தால் - மன்மதன் உடம்பு பொன்போலுந்தேமலைத் தரும்வண்ணம் ஐந்து பாணங்களையுந் தொடுத்தால்,—என் தன் காதலி உய்யுமோ - என்னுடைய தலைவி உய்வாளா! எ-று. [தலைவன் முன்னிலையாகப் பாங்கி கூறல்.] (அங)

காதலையாளின்னடியேனைக்கருதுகின்ற
காதலையாளின்னந்தீர்கிலன்காணினிக்காவனென்மேற்

காதலையானின் புறந்தோற்றிமாற்றிக்கரையரம்பைக்
காதலையாநிற்குந்தென் மருதூரவென் கண் மணியே.

(இ - ள்.) கா - காத்தருளும்,—தலையால் நின் அடியே வணங்கக் கருதுகின்ற காதலை யான் இன்னம் தீர்கிலன் தலையினாலே உம்முடைய திருவடிகளையே வணங்கும்பொருட்டு நினைக்கின்ற ஆசையை நான் இன்னமும் நீங்குகின்றிலேன்;—இனிக் காலன் என்மேல் காதலை - இனி இயமன் என்மீது பொருதலை—ஆனின் புறம் தோற்றி மாற்று - இடபத்தின் முதுகிலே தோன்றி நீக்கியருளும்;—இக்கு அரை அரம்பைக் கா தலையா நிற்கும் தென் மருதூர - கரும்புகளையுரிஞ்சுகின்ற வாழைகளையுடைய சோலைகள் முதன்மையாய் நிற்கின்ற அழகிய மருதூரையுடையவரே,—என் கண்மணியே - என்னுடைய கண்மணியே. எ-று. காண் அசை. (அ௯)

கண்டீரவந்தங்குகாட்டிருவீருங்கதிர்மறைவுங்
கண்டீரவந்தனிபோவதிங்கேதங்கிக்காலையிற்போங்
கண்டீரவந்தமொழிபங்கனைத்தென்னங்காமருதூர்க்
கண்டீரவந்தனைசெய்தூர்புகுமின்கவலையற்றே.

(இ - ள்.) கண்டீரவம் தங்கு காட்டு - சிங்கம் இருக்கின்ற காட்டிலே—இருவீரும் கதிர் மறைவும் கண்டீர்-நீங்களிருவீரும் சூரியனுடைய அஸ்தமயனத்தையும் கண்டீர்கள்;—தனி போவது அவம்-தனியே போதல் வீணாகும்;—இங்கே தங்கிக் காலையில் போம் - இவ்விடத்தே இருந்து காலையிலே போங்கள்,—கண்டு ஈர வந்த மொழி பங்கனை - கற்கண்டை வெல்லும்வண்ணம் தோன்றிய சொல்லையுடைய உமாதேவியாருடைய பாகராகிய சிவபெருமானை—தென்னங்கா மருதூர்க்கண் - தென்னஞ்சோலைகளினாலே சூழப்பட்ட மருதூரினிடத்தே—தீர வந்தனை செய்து - (வருத்தம்) தீர வழிபாடு

செய்து—கவலை அற்று ஊர் புகுமின் - கவலை நீங்கி ஊருக்குப் போங்கள். எ-று. [விருந்து விலக்கல்.] (அ௫)

வலையம்பரிக்குங்கடற்றுறைவாகறைவாளரவ
வலையம்பரிக்கும்புயத்திற்கொண்டாய்மருதூரரசே
வலையம்பரிக்குமிசையேயசையமதுரைவந்தாய்
வலையம்பரிக்குவில்வாங்கினுண்டோவென்மகட்குயிரே.

(இ - ள்.) வலை அம்பு அரிக்கும் கடற்றுறைவா - வலையினாலே சலத்திலே (மீனை) அரிக்கின்ற பரவவுருக்கொண்டவரே,—கறை வாள் அரவம் வலயம் பரிக்கும் புயத்தில் கொண்டாய் - நஞ்சையுடைய ஒளிபொருந்திய பாம்பாகிய வாகுவலயத்தைத் தாங்காநின்ற புயத்திலேகொண்டவரே,—மருதூர் அரசே - மருதூருக்கு நாயகரே,—வலயம் பரிக்குமிசையே அசைய மதுரை வந்தாய் - வல்லயம் குதிரையின் மீது அசையும்வண்ணம் மதுரையின்கண் எழுந்தருளிவந்தவரே,—வல் ஐ அம்பர் இக்கு வில் வாங்கின் - வலிய ஐந்துபாணங்களையுடைய மன்மதன் கருப்புவில்லை வளைக்கின்—என் மகட்கு உயிர் உண்டோ - என்னுடைய மகளுக்கு உயிருண்டோ. எ-று. [செவிலியிரங்கிக் கூறல்.] (அ௬)

மகவானரம்பையர்சந்திரசூரியர்மாமுனிவோர்
மகவானரம்புவிபோற்றுங்கவுரிமருவியவா
மகவானரம்புயன்மாயோனொருங்கமருங்கிற்கொண்ட
மகவானரம்பையங்காமருதூர்க்கொன்றைமாலையரே.

(இ - ள்.) மகவான் - இந்திரனும்—அரம்பையர் - தேவமகளிர்களும்—சந்திர சூரியர்-சந்திர சூரியர்களும்—மா முனிவோர் - பெரிய முனிவர்களும்—மகம் வானர் - யாகத்தின் விருப்பையுடைய தேவர்களும்—அம்புவி போற்றும்-பூமியிலுள்ளவர்களும் துதிக்கின்ற—கவுரி மருவிய வாமம் கவானர் -
[illegible]

அம்புயன் மாயோன் நெருங்க மருங்கில் கொண்ட மகவான் - பிரமாவையும் விட்டுணுவையும் நெருங்கும் வண்ணம் இரண்டுபக்கத்திலும் கொண்டருளிய ஒளியையுடையவர்— அரம்பை அம் கா மருதூர்க் கொன்றை மாலையர் - வாழைச் சோலைகளினாலே சூழப்பட்ட மருதூரின்கணெழுந்தருளியிருக்கின்ற கொன்றைமாலையையுடையவராகிய சிவபெருமான். எ - று. (அஎ)

மாலையம்போருகநோக்குங்கண்ணனைமதியங்கொன்றை
மாலையம்போருகந்தோறுந்தரித்துமன்றாடியைப்புன்
மாலையம்போருகந்தந்நாளிரணியன்மார்பகழ்ந்த
மாலையம்போருகஞ்சூழ்மருதூரனைவந்திப்பனே.

(இ - ள்.) மால் ஐயம்போர் உக நோக்கும் கண்ணனை - மயக்கத்தைச் செய்கின்ற ஐந்துபாணங்களையுடைய மன்மதன் பொடியாகும்வண்ணம் பார்த்தருளிய கண்ணையுடையவரும்—மதியம் கொன்றை மாலை அம்பு ஒருகந்தோறும் தரித்து மன்று ஆடியை - சந்திரனையும் கொன்றைமாலையையும் கங்கைநீரையும் ஒரோருகந்தோறும் அணிந்து கனகசபையின்கண்ணே நிருத்தஞ்செய்பவரும்—புல் மாலை அம் போர் உகந்து அந்நாள் இரணியன் மார்பு அகழ்ந்த மால் ஐ - புல்லிய மாலைப்பொழுதின்கண் அழகிய போரை மகிழ்ந்து அந்நாளிலே இரணியனுடைய மார்பைப் பிளந்த விட்டுணுவுக்குக் கடவுளும்—அம்போருகம் சூழ் மருதூரனை - தாமரைமலர்கள் சூழ்ந்த மருதூரையுடையவருமாகிய சிவபெருமானை—வந்திப்பன் - (யான்) வழிபடுவேன். எ-று (அஅ)

வந்திக்குந்தாபதர்சித்தத்தன்மனமகிழ்ந்து
வந்திக்குமாதரமாரவதிதொழுமன்னனைவ்வு
வந்திக்குமாதரக்கன்றருக்குமருதூரனைமன்
வந்திக்குமாதரப்போதனுகாதென்னுள்ளவிருவனே.

(இ - ள்.) வந்திகரும் ஆதாரம் பத்தர் சித்தத்தன் - வழிப டுகின்ற விருப்பத்தையுடைய அன்பர்களது சித்தத்திலுள்ளவ ரும்—மனம் மகிழ்ந்து வந்து இக் குமாதர் அமராவதி தொழும் மன்னன் - நெஞ்சம் உவந்து வந்து இப்பூமியின்கண்ணே அழகையுடைய அமராவதியிலுள்ளவர்கள் வணங்குகின்ற நாயகரும்—நெல் இக்கும் உவந்து ஆ தாரம் கன்று அருந்தும் மருதூரன் - நெல்லையும் கரும்பையும் மகிழ்ந்து பசுக்களும் கூட்டமாகிய கன்றுகளும் உண்கின்ற மருதூரையுடையவரு மாகிய சிவபெருமான்,—நமன் வந்திக்கும் மா தாரம் போது அணுகாது - இயமன் நோய் செய்கின்ற பெரிய அச்சத்தை யுடைய காலத்தின்கண் அணுகாதவண்ணம்,—என்னுள் வைகுவன் - என்னுள்ளே எழுந்தருளியிருப்பர். எ-று (அகூ)

வையம்புரந்தரமாலங்கிவின் மலைமாசுணநாண்
வையம்புரந்தரர்வானவர்பாகயன்மாமறையி
வையம்புரந்தரமாறப்படைத்தனர்மாமதுரை
வையம்புரந்தரசாண்மருதூரர்தம்வல்லவமே

(இ - ள்.) வை அம்பு அங்கி உரம் தரன் மால் - கூர்மை யும் பாணமும் (முறையே) அகினியும் வலிமையைத் தரித்த வராகிய விட்டுணுவும்சம்,—வில் மலை - வில் மேருமலையாம்,— நாண் மாசுணம் - நாணி பாம்பாம்,—வையம் புரந்தரர் வான வர் - தேர் இந்திரரும் தேவருமாம்,—பாகு அயன் - சாரதி பிரமனும்,—மா மறை - குதிரைகள் வேதங்களாம்,—இவை அம் பிரம் தரம் மாறப் படைத்தனர் - இவைகளை அழகிய முப் புரங்களும் வலிமை நீங்கும்பொருட்டுப் படைத்தருளினார்,— மா மதுரை வையம் புரந்து அரசாள் மருதூரர்தம் வல்லவம் - பெரிய மதுரையின்கணெழுந்தருளியிருந்து பூமியைக் காத்து அரசாண்டருளிய மருதூரையுடைய சிவபெருமானது வல்லவ வம் இது. எ-று. (௬0)

வல்லியமாமனதனுடையான் மருதூரன்வள்ளி
வல்லியமாமன்முருகன்பிதா மும்மலங்களென்னும்
வல்லியமாமனெகிழ்த்தென்னையாளுமென்மாட்டினிநீ
வல்லியமாமனத்துண்ணினையாய்கொல்வரத்தினையே.

(இ - ள்.) வல்லியம் மா மன் அதள் உடையான் - புலியினது பெரிய நிலைபெற்ற தோலாகிய உடையையுடையவரும்—மருதூரன் - மருதூரையுடையவரும்—வள்ளி வல்லி அம் மாமன் - வள்ளியென்னும் பெயரையுடைய கொடிபோல்வாளுக்கு அழகிய மாமனாரும்—முருகன் பிதா - முருகக்கடவுளுக்குத் தந்தையாருமாகிய சிவபெருமான்—மும்மலங்கள் என்னும் வல்லி அம்மாமல் நெகிழ்த்து-மூன்றுமலங்களெனப்படும் விலங்குகள் அமுக்காவண்ணம் பிரித்து—என்னை ஆளும் - என்னை ஆண்டருளுவர்;—வல் இயமா இனி நீ என் மாட்டு வரத்தினை மனத்துள் நினையாய்கொல் - வலிய இயமனே இனி நீ என்னிடத்து வருதலை உன்னெஞ்சிலே நினையாய்போலும். எ-று. (௬௧)

வரப்புடைக்குஞ்சிச்சடையான்குவளைமதுவொழுகி
வரப்புடைக்குஞ்செறுமாமருதூர்வெற்பமங்கைதன்பால்
வரப்புடைக்குஞ்சிங்கங்கங்குலின்வழாலைவல்லெழிலி[யே.
வரப்புடைக்குங்கொங்கையாதலின் வேண்டும்வரைவினி

(இ - ள்) வரம் அப்பு உடைக் குஞ்சியான் - மேலாகிய நீரையுடைய குஞ்சிச்சடையையுடைய சிவபெருமானது—குவளை மது ஒழுகி வரப்பு உடைக்கும் செறு மா மருதூர் வெற்ப - குவளைமலரினின்றும் தேனொழுகி வரம்புகளையுடைக்கின்ற வயல்களினாலே சூழப்பட்ட பெரிய மருதூரிலுள்ள மலையையுடைய தலைமகனே,—மங்கை தன் பால் வரச் சிங்கம் புடைக்கும்-தலைமகளிடத்து நீ வரச் சிங்கங்கொல்லும்,—கங்குலின் வாரலை - இரவிலே வாராதொழி,—வல் எழில் இவரக் கொங்கை புடைக்கும் - சூதாடுகருவியினது அழகு

செறியும்வண்ணம் தனம் வீங்கும்,—ஆதலின் இனி வரைவு வேண்டும் - ஆதலால் இனி விவாகம் வேண்டும். எ-று. [பாங்கி வரைவு முடுக்கம்] (௬௨)

இனியமனச்சுதலில்லைநெஞ்சேமன்றலீர்ங்கமலத்
தினியமனச்சுதன்போற்றும்பிரான்மருதூரிறையா
மினியமனச்சுதம்போந்திடுங்கண்டனிலங்குபொற்று
ளினியமனச்சுருதிப்பொருளோடுமிறைஞ்சுவனே.

(இ - ள்.) இனி யமன் நச்சுதல் இல்லை - இனி இயமன் விரும்புதலில்லை,—நெஞ்சே - மனமே,—மன்றல ஈர்ம் கமலத்தின் நியமன் அச்சுதன் போற்றும் பிரான் - மணத்தையுயுடைய குளிர்ந்த தாமரைமலராகிய கோயிலையுடைய பிரமாவும் விட்டுணுவுந் துதிக்கின்ற கடவுளாயும்—மருதூர் இறை ஆம் இனிய மன் - மருதூருக்கு நாயகராகிய இனிய தலைவரும்—நச்சு உதம் போந்திடும் கண்டன் - நஞ்சாகிய நீர் தங்குகின்ற கழுத்தையுடையவருமாகிய சிவபெருமானுடைய—இலங்கு பொன் தாளின் - விளங்குகின்ற பொன்போலுந் திருவடிகளிலே—இயம் மன் அச் சுருதிப் பொருளோடும் இறைஞ்சுவன் - ஒலி பொருந்திய அந்தவேதத்தினது பொருளுடனே வணங்குவேன். எ-று. (௬௩)

இறையாமலகக்கையான்மருதூரனிணையடியை
யிறையாமலகமெனக்கண்டிறைஞ்சுவனென்கவியாழ்க்
கிறையாமலகமகிழ்வுறப்பாடுவனிங்கியமற்
கிறையாமலகண்டித்தென்மேல்வருவதியல்பல்லவே..

(இ - ள்.) இறை - கடவுளும்—ஆமலம் கங்கையான் - பரிசுத்தமாகிய கங்கையையுடையவரும்—மருதூரன் - மருதூரையுடையவருமாகிய சிவபெருமானுடைய—இணை அடியை - இரண்டுதிருவடிகளையும்—இறை ஆமலகம் எனக் கண்டு இறைஞ்சுவன் - கையிலுள்ள நெல்லிக்கனிபோலத் தரிசித்து

வணங்குவேன்,—என் கவி பாழ்க்கு இறையாமல் - என்னுடைய பாட்டுக்களை வீணுக்கிறைக்காது—அகம் மகிழ்வு உறப் பாடுவேன் - மனம் மகிழ்ச்சியடையும்வண்ணம் பாடுவேன்;— இங்கு இயமற்கு இறை யாம் அல - இங்கே இயமனுக்குச் சிறுமையுடையேம் நாமல்ல;—கண்டித்து என்மேல் வருவது இயல்பு அல்ல - கண்டித்து என்மீது வருதல் (அவனுக்கு) முறையன்று. எ-று. (௯௪)

இயலுமிசையும்பயின்மருதூரிறையின்னருளா
லியலுமிசையும்பரிசநின்றேங்கிடலெய்தவிவ
ணியலுமிசையுமிதுமுடிப்பாயிங்குப்போலவெங்க
ளியலுமிசையும்பர்தம்பதிநீயுமிருந்திடவே.

(இ - ள்.) இயலும் இசையும் பயில் மருதூர் இறை இன் அருளால் - இயற்றமிழும் இசைத்தமிழும் பயிலாநின்ற மருதூரின்கணெழுந்தருளியிருக்கின்ற சிவபெருமானது இனிய கருணையினாலே—இசையும் பரிசம் இயலும் - (நீ) உடன்படும் பரிசம் பொருந்தும்;—நின்று ஏங்கிடல் - நின்று இரங்காதே;—இவண் இயலும் இசையும் எய்த-இவ்வுலகத்திலே ஒழுக்கமும் கீர்த்தியும் அடையும்பொருட்டும்—இங்குப்போல எங்கள் இயலும் நீயும் மிசை உம்பர்தம் பதி இருந்திட - இங்கே போல எங்கள் பெண்ணும் நீயும் மேலுள்ள தேவருலகத்திலும் வாழும்பொருட்டும்—இது முடிப்பாய் - இவ்விவாகத்தை முடிக்கக்கடவாய். எ-று. [வரைவெதிர்கோடல்.] (௯௫)

இருவரும்புன்னைமலர்வாவியிற்செலினீரங்கழுநீ
ரிருவரும்பன்னநின்கண்கண்டுவாடுமிருளெனக்கு
ளிருவரும்பன்னநெருங்கியகாவிலியாஞ்செல்வனீ
யிருவரும்பன்னசப்பூண்மருதூரனையூதில்வரைக்கே.

(இ-ள்.) இருவரும் மலர் பன்ன வாவியில் செலின்-நாமிருவரும் பூக்களைக் கொய்யும்பொருட்டு வாவியிலே போவோமாயின்,—நீர்க் கழுநீர் இரு அரும்பு அன்ன நின் கண் கண்டு

வாடும் - குளிர்மையாகிய குவளையினது பெரிய அரும்புகள் (தம்மைப்)போன்ற உன்னுடைய கண்களைக் கண்டு வாடும்;—இருள் எனக் குளிரு வரும் பன்னம் நெருங்கிய காவில் யான் செல்வன் - இருளென்று சொல்லும்வண்ணம் குளிர்மை வருகின்ற இலைகள் நெருங்கிய சோலையிலே நான் போவேன்,—நீ இரு - நீ (இங்கே) இரு,—அரும் பன்னகம் பூண் மருதூரன் எழில் வரைக்கு - அரிய பாம்பாகிய ஆபரணத்தையணிந்த மருதூரையுடைய சிவபெருமானது அழகையுடைய மலையினிடத்து. எ-று. [பாங்கி தலைவியைக் குறியிடத்துய்த்து நீங்கல்.] (கசு)

வரைவிலங்கையன் றனதஞ்செழுத்துமறந்திருந்த
வரைவிலங்கையன் மருதூரன்வெற்பின்வடிவிதென்ன
வரைவிலங்கையந்தருஞ்சிற்றிடைச்சிக்குமன்னற்குமிவ்
வரைவிலங்கையன் றடர்த்தானுந்தேவியுமானினவே

(இ - ள்.) வரை வில் அம் கையன் - (மேரு) மலையாகிய வில்லையேந்திய அழகிய கையையுடையவரும்—தனது அஞ்செழுத்து மறந்து இருந்தவரை விலங்கு ஐயன் - தம்முடைய பஞ்சாக்ஷரத்தை மறந்திருந்தவர்களை விலகுகின்ற கடவுளும்—மருதூரன் வெற்பின் - மருதூரையுடையவருமாகிய சிவபெருமானுடைய மலையின்கண்ணே—இது என்ன வடிவு - இது என்ன அழகு!—வரைவு இல் - பிரிவில்லை;—அங்கு ஐயம் தரும் சிறு இடைச்சிக்கும் மன்னற்கும் - அங்கே ஐயத்தைத் தருகின்ற சிறிய இடையையுடைய தலைமகளுக்கும் தலைமகனுக்கும்—இவ்வரைவு இலங்கை அன்று அடர்த்தானும் தேவியும் மானின - இம்மணம் இலங்கையை அந்நாளிலே பொருதவனாகிய இராமனையும் (அவன்மனைவியாகிய) சீதையையும் போன்றன. எ-று. [செவிலி நற்றாய்க்கிருவர் காதலையுமறிவித்தல்.] (கஎ)

மானத்தரையரைவன் புலித்தோலரைவட்டறுத்த
மானத்தரையரைத்தென் மருதூரரைமாமலரோன்
மானத்தரையரைவாழ்த்திவணங்குமின்வானத்தரு
மானத்தரையரைவைப்பரப்பாற்சிவமண்டலத்தே.

(இ - ள்) மான் அத்தரை - மானையேந்திய கையையுடையவரும்—அரை வல் புலித் தோலரை - அரையின்கண்ணே வலிய புலித்தோலையுடையவரும்—வட்டறுத்த மான் அத்து அரையரை - (தமக்கு இவ்வளவென்று வரையறுத்த உமாதேவியார் பொருந்திய சிவப்பாகிய பாதியையுடையவரும்—தென் மருதூரரை - தென் மருதூரையுடையவரும்—மா மலரோன் மா நத்தர் ஐயரை - பெரிய தாமரைமலரிலிருக்கும் பிரமனுக்கும் பெரிய சங்கையுடைய விட்டுணுவுக்கும் தந்தையாருமாகிய சிவபெருமானை—வாழ்த்தி வணங்குமின் - துதித்து வணங்குங்கள்;—வானத்தரும் மானத் தரையரை அப்பால் சிவமண்டலத்து வைப்பர் - தேவர்களும் நாணும்வண்ணம் பூமியினுள்ளோரை அப்பாலுள்ள சிவலோகத்தின்கண் இருத்தியருளுவர். எ-று. (௯அ)

மண்டலமுண்டவன்கண்டறியாதவன்வண்டமிழ்க்க
மண்டலமுண்டமுனிமுதனால்வர்வணங்குமையன்
மண்டலமுண்டகக்காடுழக்கும்மருதூரன்மூக
மண்டலமுண்டன்புசெய்நெஞ்சமேயஞ்சன் மாவினைக்கே.

(இ - ள்.) மண்டலம் உண்டவன் கண்டு அறியாதவன் - பூமியையுண்டவராகிய விட்டுணுவும் கண்டறியாதவராயும்—வள் தமிழ் கமண்டலம் முண்டம் முனி முதல் நால்வர் வணங்கும் ஐயன் - வளம் பொருந்திய தமிழை வளர்த்த கமண்டலத்தையுடைய திரிபுண்டரத்தைத் தரித்த அகத்தியர் முதலாகிய நான்குமுனிவர்கள் வணங்குகின்ற கடவுளாயும்—மண்டு அலம் முண்டகம் காடு உழக்கும் மருதூரன் - நெருங்கிய கல

ப்பை தாமரைக்காட்டை உழக்குகின்ற மருதூரையுடையவ ராயுமுள்ள சிவபெருமானது—முகம் மண்டலம் உண்டு - திரு முகமண்டலம் உண்டு;—அன்பு செய் நெஞ்சமே - அன்பு செய்வாயாக மனமே;—மா வினைக்கு அஞ்சல் - பெரிய வினை களுக்கு அஞ்சாதொழி. எ-று. (கக)

மாவினலங்ககலச்செற்றமாறங்குவாமபங்கர்
மாவினலங்கனிநீர்செந்நெற்பாய்மருதூரர்மலை
மாவினலங்கவளைத்தவர்பாதம்வணங்கினர்க்கு
மாவினலங்கலங்கற்றோளில்வாழுமலர்த்திருவே.

(இ - ள்) மா இனல் அங்கு அகலச் செற்ற மால் தங்கு வாமம் பங்கர் - யானையினுடைய துன்பம் அங்கே ஒழியும் பொருட்டு (முதலையைக்) கொன்ற விட்டுணு தங்குகின்ற இடப்பாகத்தையுடையவரும்—மாவின் நல் அம் கனி நீர் செந் நெல் பாய் மருதூரர் - மாமரத்தினுடைய நல்ல அழகிய பழத்தினது சாறு செந்நெற்பயிர்களுக்குப் பாய்கின்ற மருதூரை யுடையவரும்—மலை மா வில் நலங்க வளைத்தவர் - (மேரு)மலையாகிய பெரிய வில்லை முடங்கும்வண்ணம் வளைத்தவருமாகிய சிவபெருமானுடைய—பாதம் வணங்கினர்க்கு - திருவடிகளை வணங்கினவர்களுக்கு—மாவின் அலங்கு அலங்கல் தோளில்-வண்டுகளையுடைய விளங்குகின்ற மாலையை அணிந்த புயத்தின்கண்ணே—மலர்த் திரு வாழும் - தாமரைமலரிலிருக்கின்ற இலக்குமி வாழுவள். எ-று. (க00)

மருதூரந்தாதியுரை முற்றுப்பெற்றது.

---

திருச்சிற்றம்பலம்.

## சிறப்புப்பாயிரம்.

கயிலையொன் றீச னருள்பெற வேண்டிக் கலித்துறையான்
மயிலையந் தாதி யொருநூறு செய்யுள் வகுத்தணிந்தான
சயிலவன் றேன ளிலக்கண மாகத் தமிழ்க்குநுமைந்
தியலையுந் தேரு மறையோன் மயிலை யிராமையனே.

---

திருச்சிற்றம்பலம்.

## கௌரிமாயூரமென்று வழங்கும்

# திருமயிலைத் திரிபந்தாதி.

### காப்பு.

ஈருரும் பசுமபொற சடையார் மயிலை புறைவள்ளன்மேல்
பெருகும் பயன்பெறு மந்தாதி பாடப் பிரமாணம்பல்
வருகும்ப மாமுனி பூசைகொண் டுள்ளங்கிழொருகோ-
டிருதும்ப மும்மத நால்வாய்க் கணபதியை வேண்டுதுமே.

—:O:—

### நூல்.

பூமனை யானையு மாயோனை யுந்தந்த பூங்கழலைத்
தாமனை யானை வனையுந் துவசனைச் சங்கரிதே
வாமனை யானை யதனுடை யானை மயிலையின்
தேமனை யானை மனமே நினைமணைக் கோ திருநாற்கே. (க)

கேதகத்து வந்தனை மருப் படைவத்திற் கிடக்குழலு
நீதத்து வந்தனை பரமபதே மயிலை நிமலர்மேல்
பாரத்து வந்தனை செய்தனை யேற்பல வாஞ்சனன
பேரத்து வந்தனை பாற்பிற வாமை பெறுதியெஞ்சே (உ)

# திருமயிலைத் திரிபந்தாதி.

பலதரங் கந்த மலாகொண் டரிபணி பாதர்தில்லை
யலசரங் கந்தண் மயிலையி லொன்றுகொண் டாடுமைப
சலதரங் கந்தவ ழூஞ்சடை யார்வரைத் தையலுக்குச்
சொலதரங் சுந்தர மாதஞ் சுகங்கிஞ் சுகங்கமுமே. (௯

சுகத்தினந் தத்துவண் காவார் மயிலையிற் றூயன்மத
முகத்தினந் தத்துவக் கன்றரித் தோனுமை காணவிந்தச
சகத்தினந் தத்துவந் தாடும்பி ரான்றனைத் தள்ளிச்செய்த
மகத்தினந் தத்துவ ருத்திர மார்தினன் மாமனுக்கே. (௧௦

மாயூர நாத மயிலையி லீச வரியரவக்
கேயூர நாதசொ ரூபாவென் னெஞ்சமுண் கிஞ்சுகத்தாண்
மீயூர நாதசன் மாவணங் கற்புத வெவ்வினையா
ஞெயூர நாதனை நீயருட் கண்கொண்டு நோக்குகவே (௧௧)

வேதாக மத்தந்த மேவுமத் தாபலி வேண்டியன்று
வேதாக மந்தங் தனிற்சேர் மயிலை விமலசெம்பொற்
போதாக மர்தஞ் சரித்தோய் கருணை புரியயி போம்
போதாக மத்தந் தமர்மீதி லாசையைப் போக்குவித்தே. (௧௨)

போக்கவ ராதிர நாமா தியைநின் புகழ்ப்பெயரை
நாக்கவ ராதியல் பாகன் னெறியி னடக்கவரா
தூக்கவ ராதிய ரூர்காய் மயிலையி லுத்தமனே
நீக்கவ ராதி யெனினுஞ் சரண்புகென் னீள்வினையே. (௧௩)

நீளா வணங்க ணொருட்டு மயிலை நிமலவுனக்
காளா வணங்கல னுயினுந் தொல்லை யடியனென்றே
மீளா வணங்கனல் வெவ்வினை தீர்த்தினி மேற்பிறந்து
மாளா வணங்கரு ணைப்பார்வை யென்மிசை வைத்தருளே.

வைத்தச னங்கள் பெறும்பணி பூணு மயிலைப்பிரான்
பத்தச னங்கரு தும்பரன் வெற்பிற் பவளச்செவ்வாய்ப்
முத்தச னங்கவர் தற்குநல் வேளையிப் போதென்கொலோ
சித்தச னங்கனை யன்னீ ருமது திருவுள்ளமே. (௧௫)

திருமயி லைப்பதி யைப்பிறை மோலி திகழ்வள்ளலும்
பொருமயி லைப்பதி கண்ணஞ்சன் மாதும் பொருந்திவைகும்
பெருமையி லைப்பதி தன்சே ரினுமுத்திப் பேறவனுக்
கருமயி லைப்பதி யெண்பதி புக்குழங் காவதென்னே. (௧௬)

ஆவினி லாவந்தி வந்தா லெனக்கணங் கேயதன்பின்
பாவினி லாவந்திவ் வூரிலென் செய்யும் பயினைமென்று
காவினி லாவந் தியங்கி யுறங்குங் கவின்மயிலைக்
கோவினி லாவந் தினம்பெறு நீத்தெறி கொன்றையுமே (௧௭)

கொன்றத்தி யங்கதன் றோல்போர்த்த மெய்யனெங் கோன்மயி [லைக்
குன்றத்தி யங்கவ் வணங்கையன் பன்கொடுங் கானின்மென்
கன்றத்தி யங்கும னங்கொடு செல்கின்ற காரணத்தா [ருள்
லின்றத்தி யங்கலி போலெம ராலித்தி ரங்குவரே. (௧௮)

இரவல ராவன சத்தையிர் னேரத் திதழ்திறந்து
கரவல ராதவ ராகுவ ரோபொற் சரோருகத்தின்
விரவல ரார்குழன் மின்னேயெவ் வாறிங்கு மேவினைநீ
ஞரவல ராவணி தோளார் மயிலை யுயர்வரைக்கே. (௧௯)

உயரையி ராவண வாகனத் தோன்முத லும்பருற்ற
துயரையி ராவண நீக்கவி ராமனைத் தோற்றியிலங்
கயரையி ராவண னோடு வதைப்பித்த கார்க்களத்தெண்
புயரையி ராவண நீள்கா மயிலையிற் போற்றுநெஞ்சே. (௨௦)

சேவாக னத்தன் மயிலையி லீசன், சிலையொருபான்
மேவாக னத்த னருளனுஞ், செயுநல் வினையுமன்றிச்
சாயாக னத்தம் வரிநெஞ்ச மேநந் தமைப்பரிந்து
வீவாக னத்த பொருளுங், கிளையுங், கலன்களுமே. (௨௧)

கலசங், கரிக்கும்ப மென்னுந் தனக்கங்கை காந்தர்வரைக்
குலசங் கரிக்குங் கொழுநர்கற் பாந்தங் குறுகிலண்டம்
பலசங் கரிக்கும் பரனார் பிரமன் பணிமயிலைத்
தலசங் கரிக்கு மதனைவென் றோர்பர தத்துவமே. (௨௨)

துவள வளைக்கும் வரைவில்லர் பொன்னித் துறையிலெங்குந்
தவள வளைக்குல முத்தீன் மயிலைத் தடவரைவாய்ப்
பவள வளைக்குழைக் காதோ டிகல்விழிப் பாங்கியெனு
மிவ்வள வளைக்குறி மேவற்கு வாயி லினிநமக்கே. (௨௩)

இனியன கைக்கு மிளநில வங்கி யெனச்சுடுமென்
சனியன கைக்கும் வளைகணில் லாவெனுந் தையலைத்தாய்
முனியுமன் கைக்குமிவ் வூர்த்தணிப் பாயிலன் மோகத்தைநீ
தனியன கைக்கும ணாளா மயிலையிற் சங்கரனே. (௨௪)

சங்கத்தி லந்தவழ் செய்சூழ் மயிலைத் தலத்துறைவோர்
பொங்கத்தி, னர்க, வுரித்தார் வரையில்வின் பூவையர்நம்
மங்கத்தி லூர்ந்த மிலரோ, தவரு மீவர்கனிவாய்
நுங்கத்தி னந்தவஞ் செய்யார் கிடைத்திடி னும்பிறழே. (௨௫)

நமருக மானனை யார்தந்த காமவெங் கோயுரைத்தல்
கமருக மான தினிமட லேகதி, காணயனு
ரமருக மான வரிக்கொரு நாளென் றமைத்துவைத்த
தமருக மானமர் கையார் மயிலைச் சயிலமின்னே.

மின்னக ரும்பணி பூண்டமின் னேமலர் வேண்டுதிரேற்
பொன்னக ரும்பணி தென்னூர் மயிலைப் புனித வொரபிற்
பின்னக ரும்பணி கேட்குந் தகைத்துப் படுத்தபனை
யன்னக ரும்பணி யொன்றுகண் டேனங் கனுகற்கவே (உஎ)

கற்பழ ருங்கலை யென்றே குதலொழி காண் மயிலைச்
சற்பும ருங்கலை யாறுட தரித்த சடைவ வெற்பா?
பொற்பம ருங்கலை கொளவானி ராமனைப் போற்றியென்ற
சொற்பம ருங்கலை சீசைமுன் னுற்ற துயர்பெரிதே. (உஅ)

துயருந்தி யங்குயில் கூவுமென் றுங்கை தணைச்செவிகே
தயருந்தி யங்கு மழுமாவிம் மானுக கருள்கிலையா
துயருந்தி யங்குசப் பன்மந்தி காவி வெழுகுமது
வையருந்தி யங்சண மயங்கு மயிலை மமுவலனே. (உகூ)

வலவரு மைக்கு மந்கர் மலைக்கு மலையுள்ளார்
குலவரு மைச்சும ரக்கையர் நன்மலர் சொண்டிவின்னோர்
பலவரு மைக்குல வாகன னும்பணி பாசர்பெயர்
சொலவரு மைக்குழ லிங்கிளை கேள்வன் றுணைத்தனமே (கூ0)

தணங்காத் திரமைய நுண்ணிடை சைவலங் சாரளாக
மணங்காக் கிரமை யரிக்கண் முகமம் புயமதிமோ
னங்காத் திரமைய செய்யார் மயிலைக் கடவுள்வெற்பிற்
புணங்காத் திரமை யமைந்தாங் கிருந்தவப் பூங்கொடிக்கே. ()

பூங்காவி யம்புகள் வேள்விடும் போதுயிர் போங்கணையிற
தேங்காவி யம்பு கவிழ்ந்தாங் கெனவிவள் செய்திமையநீ
பாங்காவி யம்புக வண்டே மனையிற் பழகுகிள்ளை
தாங்காவி யம்புகன் மாமயி லைப்பரன் சந்நிதிக்கே. (கூஉ)

என்னத்த னாகச் சமர்க்கெய்து மாரன் சரங்களைந்து
மென்னத்த னாகத் தெழுந்திங் கருமெனை யென்செயுங்கா
லென்னத்த னாக சயனத்த னேத்து மரன்மயிலை
மன்னத்த னாகத்து மாலை மாலைக்குள் வந்திடினே. (௩௧)

வந்தநஞ் சாரலின் மையுறு கண்டர் மயிலைவெற்பி
லிந்தநஞ் சாரலி லெண்ணில ரோமுன் னிரந்தவர்கோ
விந்தநஞ் சாரலின் மெய்த்தவஞ் செய்யினு மேவரிதா
நந்தநஞ் சார லிவர்க்கெளி தாகவென் றோற்பனரே. ௩௨)

நோகாம னம்புனல் சோரா விழிமதி நோவியற்று
மாகாம னம்பு வருத்தாது தென்றல் வரினுமெய்க்கு
மாகாம னம்புகுஞ் சொல் சூழ் மயிலையில் வள்ளல்வந்து
நீகாம னம்புதி நீத்தாங்கி யான்றுயர் நீத்தபின்னே. (௩௩)

பின்னலங் காரள கத்தாற் குழ்பிறை போனுதலு
முன்னலங் கார முலைகளுந் திங்கண் முகமுங்கொண்டே
னென்னலங் காரணி சோளார் மயிலைக்க ணின்றவந்த
மின்னலங் கார வுருவின்று தோன்றும் வெளியெங்குமே. ()

எங்கும கந்தனி வந்தவி ருளும்பெய வேதுளையீர்
குங்கும கந்த முலையீர் சொலிற்குறை வாங்கொலென்பா
றங்கும கந்துவிர்த் தாமவார் தமையன்றித் தக்கன்செய்த
பொங்குமக கந்தகர்த் தார்தென் மயிலைப் பொருப்பிடத்தே. ( )

பொருந்தா ரணியெயில் காய்ந்தோன் மயிலைப் புனிதன்வெற்
முருந்தா ரணிநகை மொய்குழற் பேதை முலைவிலைக்கா {யின்
விருந்தா ரணிபுய மன்னவ நீபுரக் கின்றவிந்தப்
பெருந்தா ரணிமுழு துந்தரி னும்பெறும் பேறலவே. (௩௫)

பேரம ருந்துங்க ணம்புபட் டாகம் பிளப்பட்டநோய்
தீரம ருந்துங்கள் செவ்வா யமுதன்றித் தீங்கரும்பின்
சாரம ருந்துங் களிமந்தி தாவுந் தனிமயிலை
பூரம ருந்துங்கர் வெற்பணங் கேபிறி தொன்றிலையே. (௬௯)

இலைய மலைக்கு மனமுற யோகத் திருக்கவல்ல
மலைய மலைக்குறு மெய்த்தவன் போற்று மயிலைவள்ளல்
கலைய மலைக்குங் கவின்முலை வேற்கட் கரும்புருவச்
சிலைய மலைக்கும ஞளருண் டென்பவந் தீர்ப்பதற்கே. (௭௦)

தீக்குவித் தாரநெய் பெய்த விவட்கிரஞ் செய்தலென்று
வாக்குவித் தாரமு லைப்பார லாற்சக வண்பயிரை
யாக்குவித் தாரம் மயிலைவள் ளற்குளைத் தாகுலமார்
நீக்குவித் தாரவ ரோதாய வொன்றுகண் ணீர்பெய்யுமே. (௭௧)

பெய்யற் கெழுதரு கார்க்கந் தரத்தெம் பிரான்மயிலைத்
தையற் கெழுதரு நேரிடை யற்பந் தபோதனரு
மையற் கெழுதரு ணத்தன பாரம் வரைச்சிகர
மெய்யற் கெழுதரு லக்கிட்ட மாலம் பிருகண்களே. (௭௨)

இருமந் தரவரைக் கொங்கைநல் லாள்குயி லின்னிசைகேட்
டிருமந் தரவயி ஞர்ப்பதற் கஞ்ச மொடுங்கியுள்ளந்
தெருமந் தரவ மளைபுகுந் தாங்குத் திகைத்திடுமோ
சருமந் தரவன் மயிலையத் தாபுயத் தாருனே. (௭௩)

அருமருந் தாருவ திற்பல னேதென் றதலையத்தே
வருமருந் தாருன் மணிவா யமுதுணின் வள்ளல்லைகுந்
தருமருந் தாரு நிகர்கா மயிலைத் தயருமுள்ளந்
தெருமருந் தாருணி பம்பெற்ற தேமொழி சித்தமிதே. (௭௪)

சித்தரி லேகர் தினந்தாழ் மயிலையிற் சிற்பரபொன்
கைத்தரி லேகநற் பட்டுடை நீக்குங் கணிகையர்ச்சேர்
பித்தரி லேகணிக் கப்படும் யானும் பெறுகுவனோ
பத்தரி லேக னிவனென்று நோக்குநின் பார்வையையே. (சஅ)

பாரத்த னத்தினங் கொல்லைக் கிவர்பல காலவரனின்
சாரத்த னத்தினன் றேவுறிந் தேனின்று தண்டடத்தின்
றீரத்த னத்தினஞ் சேர்ந்துவந் தாடுந் திருமயிலை
யூரத்த னத்தினஞ் சுண்டான் வளையிலுன் னுள்ளுறையே. ()

உள்ளக் கவலையி லுடிகின் றேன்மக ளுர்க்குச்சென்ற
கள்ளக் கவலை யறிகில னீயிருங் கண்டிலிரோ
வெள்ளக் கவலைய மார்த்தார் மயிலை விமலர்வெற்பில்
வள்ளக் கவலையின் மாந்தனை மாட்டு மறத்தியரே. (சஎ)

மறந்திருப் பாரல ருன்னைநின் மேல்வைத்த வாஞ்சையினைத்
துறந்திருப் பாமனங் கொள்ளா ரிரதஞ் சுடரவன்றென்
புறந்திருப் பாமுன் வருவார் மயிலைப் புனிதன்வெற்பிற்
பிறந்திருப் பாவைபொப் பாய்விடை நீகொடு செல்பவர்க்கே

செல்வினஞ் சார வுயர்கா மயிலைச் சிவன்சயில
வில்வினஞ் சாரவி காரன் பொருப்பின் மெலிமருங்குல்
வல்லினஞ் சாரலஞ் சோலையிற் புள்ளொலி மல்குமுன்போ
லல்லினஞ் சாரதற் கேதுவைச் சென்றறி யத்தகுமே. (சகூ)

தகவிலை யம்புகுந் தாரெனி னும்பெருந் தன்மையுள்ளார்
நகவிலை யம்பு தொடவனைத் தார்கடை காளிலிந்தச்
சகவிலை யம்புரி வார்வனை முந்தந் தடவனசத்
தகவிலை யம்பு நிகர்க்கு மயிலை யமர்பதியே. (ருo)

தீர்த்தன மாதங்க மாய்த்தோன் மயிலைச் சிலம்பிற்பொன்னை
வார்த்தன மாதங்க நந்தமங் கத்துற மார்பிலவ
ரோர்த்தன மாதங்க வேற்பு நிருவ விருதையினன்
கார்த்தன மாதங்க மேதரு மாலின் றகற்றினமே. (சுங)

அகலாக வம்புரி முப்புரத் தோரை யடுவஞ்ஞனன்
னகலாக வம்புவித் தோராதி யுத்தசன் ஞாசமெலா
மிகலாக வம்புனைந் துட்கும் படிவென்ற வீரருக்குப்
புகலாக வம்புயச் செய்சூழ் மயிலைப் புரமென்பரே. (சுச)

என்பர வத்தணி பூண்டார் கவுரி வெழின்மயிலாய்
முன்பர வத்தர் மயிலைக்கு நால்செலு முன்வலவா
வன்பர வத்தண் முகிலேரு மேலக்கு வஞ்சியுந
மன்பர வத்தர்கொலென்றெண்ணிநெஞ்சகொத்தஞ்சறுமே சுரு

அஞ்சகந் தங்குல மென்றெய்து நீவிரிங் காயலென்று
னஞ்சகந் தங்குழை தோய்விழி கண்டுழை நண்ணுறுமால்
விஞ்சகந் தங்குல வங்கா மயிலை விமலர் வெற்பி
னெஞ்சகந் தங்குறை நீர்புனங் காக்கின்ற நீதிநன்றே. (சுசு)

நீதி னடந்தமை வுற்றநற் றூபதர் நெஞ்சுறைவோ
ஞூதி னடந்தமி லான்மயி லைப்பர னன்றுமன்றுட்
கோதி னடந்தக வாடினன் வெற்பினிற் கூர்விழிதோய்
காதி னடந்த கடுங்காம வெள்ளங் கடக்கரிதே. (சுஎ

கடனஞ் சமுகந்த கண்டனுங் காமனைக் காய்ந்தவனு
நடனஞ் சமுகந் தருக்குறச் செய்திடு நாதனும்போ
திடனஞ் சமுகந் தனிலொன்றை யீர்ந்திடு மேந்தலும்பார்ப்
புடனஞ் சமுகந்த செய்சூழ் மயிலை யுறையரனே. (சுஅ)

அரவா ரலயக லணிந்தோன் மயிலை யமலனுதற்
பரவா ரலர்க ணுடையோன் வரையி லுன் பக்கலினி
விரவா ரலங்கவர் செல்கவெற் பாபகல் வெம்பலராற்
குரவா ரலங்கரித் துக்கொள்வர் நீயக் குறியறிந்தே. (சுகூ)

குறியம ருங்கர வல்குற் கருங்குழற் கொவ்வைச் செவ்வாய்ச்
செறியம ருங்கர வுங்கவர் கண்ணியைத் தென்மயிலை
மறியம ருங்கர வள்ளல்வெற் பாவனை வாவெயமது
றறியம ருங்கர வம்பல வார்ப்ப வறுகணிந்தே. (எ0)

அறுவா ரெந்தடங் கையா பிரண்டுடை யையயற்கையன்
பறுவத னந்தனை பாகன் மயிலைப் பரமன்வெற்பிற்
சிறுவத னந்தரு வேள்சொல்க பாணிந்தச் சென்மத்திலோ
வறுவத னந்தர சன்மத்தி லோவன்ப ரோடினியே. (எக)

ஓடம் படவட ருங்கட லேலவடி வுற்றவராற்
றோடம் படவட நேர்வரி கூர்நடத் தூர்வளைபே
நீடம் படவடம் பேமயி லைப்பர னெய்தலின்வே
ணீடம் படவட கால்வந்து மன்பர் நிலைத்திலரோ. (எஉ)

இலவும ருங்கற் பகற்காத்த கிள்ளையொத் தேன்கழுகும்
பலவும ருங்கற் பசநேர் மயிலைப் பரமன்வெற்பிற்
குலவும ருங்கற்ப மின்னேநின் போலெவன் குறைமறுத்துச்
சொலவும ருங்கற்ப ரேன்மட லூரத் துணியினின்றே. (எங)

இன்றே னலம்புனத் தேந்திழை யைக்கண் டிடாமலயர்
கின்றே னலம்புரை கேட்டிலிர் போலுங் கிளத்துகிர்கா
மென்றே னலம்புகுஞ் சால்பாய் மயிலைமெய் யன்வரைமான்
கன்றே னலம்புகு குன்றே யவர்சென்ற கானெறியே. (எச)

கான்கண் டகமயிர் கோத்திர்ப்ப வெம்பரல் கால்பொருப்ப
வான்கண் டகனென்னத் தோன்றருக்கன் மெய்வாட்ட வெங்கண்
மான்கண் டகனொரு வன்பின் சுரஞ்சென்ற வாறையெவர்
தான்கண் டகலவி யார்மயி லைப்புனி தன்மனைக்கே. (௭௫)

கேதப் படுகை மதியழுங் கன்றிக் கெடுமதனன் [வாய்
போதப் படுகை பொறுத்துய்யு மோகொன்றைப் போதருள்
சீதப் படுகையிக் கோங்கு மயிலைநந் தேவபிரக்கென்
றோதப் படுகை வலியமன் பார்க்கரு ளுத்தமனே. (௭௬)

உத்த மனத்தி னணிதிகழ் தாமரை போடைகளி
னித்த மனத்தின நீங்கா மயிலை நிமலன்றன்பால்
வைத்த மனத்தினன் மாதவ ருற்பவ மாற்றிவிதி
யத்த மனத்தி னழியாப் பதம்பெற் றமர்வரன்றே. (௭௭)

அமரா வதியபி ராமமு மேரி லணிமயிலை
யமரா வதியரன் வெற்பிலிங் காறலைப் போருமே
லமரா வதிபல் பலவேயன் றேன்மன் னவர்முதலா
வமரா வதியர் லென்றோ டெதிர்ப்பவ ராருளரோ. (௭௮)

ஆர்க்கணி தானம் புலிபோ டணிபு மரன்மயிலை
யூர்க்கணி தானந் தனத்திடை நைத லொழிமனனே
பார்க்கணி தானம் பதியென் றடியும் படியுமிவர்
கூர்க்கணி தான முரைப்பது போலிமை கூடுமன்றோ. (௭௯)

கூடலை யாறு முடையாய் மயிலையிற் கோயில்கொண்டோய்
பீடலை யாறு படருஞ் சடில பெருமயலா
னீடலை யாறுக மென்பா ருணையுய நீத்தனருன்
னாடலை யாறுக வொண்டொடியோடெம் வந்தொன்றுகவே.(௮௦

யறுகுத லைக்கணி கம்பிரி யாது மனங்கிள்ளைதான்
பெறுகுத லைக்கணி தம்பிற வாது பிறைமதியோ
தெறுகுத லைக்கணி வாய்க்கால் பெருகுந திருமயிலை
யறுகுத லைக்கணி வார்க்கெளி யேன்குறையார்சொல்வரோ.(அஎ,

ஆரம் பரவும் புனைதென் மயிலையி லர்த்தனைபெர்
நேரம் பரவு மனமே நெறிகட நித்திலங்க
டாரம் பரவுந் திருக்கா விரிபடி தீருதியாங்
காரம் பரவுப காரஞ்செ யென்பயங் காலனுக்கே. (அஅ)

காலா னலங்கலை மாமதி பெய்யமெய் கன்றிமதன்
கோலா னலங்கலை யுந்தமி யேற்கனை கூற்றுவன்காண்
சூலா னலங்கலை நீர்மலர் மேய்வயல் சூழ்மயிலை
மேலா னலங்கலை மின்னே கொணர்தி விரைந்தெழுந்தே.(அகூ

எழுமா தவணிக ராழியை நாளு மிரந்துபதந்
தொழுமா தவனிடை வைத்தோன் மயிலையிற் றுன்னிநெறி
கெழுமா தவனிலை நின்றூற்கு மன்றல் கிளர்கமலச்
செழுமா தவணி கலை மாது மூவருந் தேவியரே. (கூ0)

தேவருந் தானவ ரும்பணி தெய்வஞ் சிறையளிமென்
பூவருந் தானவ நாதம் பயில்பொழில் புக்குவெயிற்
சேவருந் தானவ சங்கொண் டுறங்கு மெழின்மயிலைக்
கோவருந் தானவ னைப்பினைப் போர்மனக் கோயிலிலே. (கூக)

கோலத் துருவங் கொடுமா லகழ்ந்துங் குறிப்பரிதாய்
ஞாலத் துருவங் கிரியார் மயிலை நகரணங்கே
சீலத் துருவன் றிசைத்துமங் காவெனத் தேர்ந்துவிண்மின
போலத் துருவம் பிரிந்தார்சொ லென்றுபுலம்பலென்னே.(கூஉ

என்னாக மாலை யெழுப்பத் தழற்கிடு மிந்தனம்போன்
முன்னாக மாலை வருங்காண்பின் னாகு முளைமதிக்கென்
பொன்னாக மாலைக் கிடைக்கும் பாமிதைப் போய்வண்டுகொள்
பன்னாக மாலை யணிமயி லைப்பரன் பாற்சொல்லுமே. (கங)

சொல்லவமானன்பர்சொன்னாலெனவங்குத்தோன்றுமஞ்சைப்
பல்லவ மானகை வஞ்சிகண் டஞ்சிப் பகரிலெனக்
கொல்லவ மான மிதன்மேலு முண்டுகொ லோட்டுதேர்
வல்லவ மானமர் கையா னுறையு மயிலையிலே. (கச)

மயிற்சாப மாய வருத்தீர்த் தமைக்கு வடிவளித்தோ
னெயிற்காய மாயனாம் பேந்தா மயிலையெம்மான்முன்வண்டே
யெயிற்றாய மாய வுருப்பெங் கும் வேளம் புருவிச்சென்ற
மெயிற்காய மாயவும்போதுமென்றேயென்விதனத்தையே கரு

ஏனதடங் காட்டி யெனக்கடங் காமய றந்தென்முன்னே
மனதடங் காட்டியைப் போனின்ற வாறு மருங்கினிபத்
தினதடங் காட்டிசை தாளார் மயிலை யெழில்வளாமே
வினதடங்காட்டில்விழிபுரைத்தோசொலுமென்கைகொண்டே

மென்பந் தனைய முலைச்சூளை யர்சொல் வியந்துறைவோ
ரின்பந் தனையன் மழலைச்சொ லென்றெண்ணி யெய்துவரே
முன்பந் தனைய முனிந்தோன் மயிலையின் மூட்டுவித்த
வன்பந் தனையல தன்பனை கோவ வழக்கில்லையே. (கள)

இல்லத் தமருக வென்றெம ரெம்மையு மேனலையு
மெல்லத் தமருக மைப்பா ரிடுக்கண் விளைந்தன்பா
னெல்லத் தமருக வில்லா மயிலைகித் தன்பலிக்குச்
செல்லத் தமருக மார்த்தோன் வரையிற் றினமுடனே. (கஅ)

படதுளி யங்குயிர் போதுமன் யாவிய னோமெனக்
கிடதுளி யங்குலி சன்றாழ் மயிலையி லீசர்வெற்பின்
மடதுளி யங்குசப் பல்லுகிர் வேங்கை வருவதுகண்
படதுளி யங்குமி றுங்காட் டிரவர லஞ்சதுமே. (கூகூ)

மேக முவந்தண்ட வோங்கிமென் பாளை விரித்தழகார்
மாக முகந்தண் டலைசூழ் மயிலைவள் ளற்பணிவோர்
நாக முகந்தண்ட கோளமெட் டும்புகழ் கண்ணி யெண்ணில்
போக முகந்தண்டர் கோனென வாழ்வரிப் பூதலத்தே. (க00)

## திருமயிலைத்திரிபந்தாதி முற்றிற்று.

திருச்சிற்றம்பலம்.

